



# தயாராகிறது திருச்சி!

**– நேரடி ரிப்போர்ட்**

கடந்த ஒரு மாத காலமாய் திருச்சி மாநகரைச் சுற்றி காவல் துறையினரின் பாதுகாப்பு வளையம் அமைக்கப்பட்டு விட்டது.

அதனையும் மீறி மாலை நேர செய்தித் தாள்களில் இடம்பெற்ற இரண்டு செய்திகள் இதுவரை நிம்மதியாய் இருந்த திருச்சி மாநகர மக்களின் மனசுக்குள் இலேசாய் திகிலைப் பரவச் செய்தன.

ஒன்று : திருச்சி மாவட்ட பி.ஜே.பி தலைவர் சுப. பழனியப்பன் வீடு சின்னக் கடை வீதியில் உள்ளது. மார்ச் 9 அதிகாலை 2:30 மணி. தெருவில் நின்றிருந்த பழனியப்பன் காரை ஒரு வாலிபர் சுற்றிச் சுற்றி வந்து நோட்டமிட, வீட்டுக்குள் பாதுகாப்புக்கு நின்றிருந்த போலீசார் பாய்ந்து சென்று அவனைப் பிடித்து எந்த ஊர் எனக் கேட்க, அவன் கோவை (!?) என்று சொல்ல, உடனே அவனை கோட்டை போலீஸ் நிலையத்துக்குக் கொண்டு சென்று விசாரித்தார்கள். அவன் கல்லூரி மாணவன். சொந்த ஊர் கோவை. திருச்சி கல்லூரி ஒன்றில் விடுதி வாசம். அரியமங்கலத்தில் இருக்கும் அக்கா வீட்டிற்குப் போனவன் இரவு நேரங்கழித்து திருச்சிக்கு வர, விடுதிக்குப் போனால் வார்டன் உள்ளே விட மாட்டார் என்று மலைவாசல், சின்னக்கடை வீதி என்று சுற்றிக் கொண்டிருக்கும்போது பிடிபட்டு விட்டான். அவன் சொன்ன விவரங்கள் கல்லூரி விடுதி வார்டனுடன் தொடர்பு கொண்டபோது உண்மையாய் இருக்க விடுவிக்கப்பட்டான் அந்த இளைஞன்!

இரண்டு : பிரதமரின் விசேஷ பாதுகாப்பு படையினரும், உளவுத் துறை

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com   ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

அதிகாரிகளும் மாநாடு நடைபெறும் இடங்களை மார்ச் 9 அன்று மதியம் பார்வை யிட்டுக் கொண்டிருந்தனர். நகரில் அவர்கள் மாநாட்டு மைதானங்களைப் பார்வையிட்ட அதே நேரத்தில், மதியம் 1.45 மணிக்கு தென்னூர் ஹைரோடு தில்லைநகர் திருப்பத்தில் ஒரு புல்லட் மோட்டார் சைக்கிளின் பெட்டியிலிருந்து 'டமார்' என்று குண்டு வெடித்தது! பொதுமக்களும், கடைக்காரர்களும் பீதியடைந்து சத்தம் வந்த திசையை நோக்கிய போது, புல்லட்டில் வந்தவர் குண்டு வெடித்த பெட்டியைத் தூக்கி எறிந்து விட்டு மின்னல் வேகத்தில் பறந்து சென்று விட்டார். போலீசுக்கு உடனே தகவல் பறந்தது. குண்டு வெடித்த 15 நிமிடத்திற்குள் துப்புத்துலக்கி விட்டனர் போலீசார். அந்த நபரிடம் லைசென்ஸ் இருக்கிறது. நாட்டுத் துப்பாக்கி. கொக்கு, புறா வேட்டைக்காரர். வேட்டையிலிருந்து திரும்பியவர் துப்பாக்கியை வீட்டிலே வைத்து விட்டு, வெளியே வண்டியில் கிளம்பியிருக்கிறார். 'ஞாபக மறதி'யாய் சைடு பெட்டிக்குள் முன்பு போட்டிருந்த நான்கு தோட்டாக்கள், வண்டி அதிர்வினால் வெடித்துச் சிதற எல்லோருக்கும் அதிர்ச்சி!

மேற்கண்ட இரண்டு நிகழ்ச்சிகளும் 'ஒன்றுமற்று'ப் போனதில் நகர மக்களுக்கு மனநிறைவுதான்.

மண்ணிலேதான் இந்த பரபரப்பு என்றால், விண்ணிலும் அதே பரபரப்பு! மார்ச் 9 இரவு நேரத்தில், நான்கு விமானங்கள் திருச்சி நகரை சுற்றிச் சுற்றி வட்டமடித்துக் கொண்டிருந்தன. காவல் துறையினர் விமான நிலைய போலீசாரிடம் தொடர்பு கொண்டார்கள். பாண்டிச்சேரியிலிருந்து வந்துள்ள பயிற்சி விமானிகள் இரவு நேரத்தில் விமானம் ஓட்டும் பயிற்சியை மேற்கொண்டுள்ளதாகக் கூறினார்கள்.

'அப்பாடா' என்றிருந்தது எல்லாருக்கும்.

**"கேடி கந்தன்கிட்ட மாமூல் கேட்கப் போனியே, என்ன கெடச்சது?"**

**"நாலு குத்தும் இரண்டு மிதியும்தான், சார்!"**

**— உமா**



திருச்சி மாநகரைச் சுற்றி புறவழிச் சாலைகளில் எட்டு செக்போஸ்ட்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றிலும் தடுப்புச் சுவர் எழுப்பி ஓர் உதவி ஆய்வாளர், நான்கு காவலர்கள் சுழல் முறையில் 24 மணி நேரமும் கண்காணிப்புப் பணியில் ஈடுபடுத்தப்பட்டு உள்ளனர்.

கருமண்டபம், எடமலைப்பட்டி புதூர் காவல் நிலையம் அருகே, விமான நிலையம், மலையப்ப நகர் - அரியமங்கலம், காவேரி பைபாஸ் பாலம், அழகிரிபுரம் - கொள்ளிடம், குடமுருட்டிப் பாலம், 'உய்யக் கொண்டான் வாய்க்கால் பாலம். இந்த எட்டு புறவழிச்சாலை செக்போஸ்ட்டுகள் இல்லாமல், வேறு எந்தச் சாலை வழியாகவும் ஒரு வாகனம், திருச்சி மாநகர எல்லைக்குள் நுழைந்து விட முடியாது.

'ஒருதலைபட்சமாக முஸ்லிம் வீடுகளில் மட்டும் அத்துமீறி காவல் துறையினர் விசாரணை நடத்துகின்றனர்' என்ற த.மா.கா. சட்டமன்ற உறுப்பினர் ஆருண் கருத்தை சட்டம் - ஒழுங்கு துணை ஆணையர் ஆர். ஆறுமுகம் நம்மிடம் மறுத்தார்.

"நகர எல்லைக்குள் இருக்கும் அனைத்து வீடுகளிலும் அந்தந்த வீடுகளில் உள்ளவரின் ரேஷன் கார்டு அடையாள அட்டையை வைத்து துருவித் துருவி அந்தந்த மதத் தலைவர்கள் தெரு முக்கியப் பிரமுகர்களை வைத்துக் கொண்டு விசாரணை செய்து வருகிறோம்!" என்றார்.

பாலக்கரை, பீமநகர், மேலப்புதூர் பகுதிகளில் இந்து - முஸ்லிம் - கிறிஸ்தவர்கள் என்று மூன்று மதத்தைச் சார்ந்தவர்களும் வசித்து வருகிறார்கள். காவல் துறை எல்லோரிடமும் விசாரித்து வருகிறது.

இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் இரவு நேர டிபன் கடை நகரில் எங்கும் கிடையாது. முன்பெல்லாம் நகரின் முக்கிய இடங்களில் விடிய விடிய கடைகள் ஒன்றிரண்டு இருக்கும். இப்போது எதுவும் இல்லை.

இரவு நேர ஆட்டோ பயணிகள் தீவிரமாய்க் கண்காணிக்கப்படுகின்றனர். இதனால் இரவு நேரங்களில் ஆட்டோ ஓடுவது

குறைந்து விட்டது. இரவு 10 மணி காட்சிக்கு திரையரங்குகளில் கூட்டம் இல்லை என்று கூறுகின்றனர்.

நான்கு ஆட்டோக்களைச் சொந்தமாக வைத்து வாடகைக்கு விடும் மாரியப்பன் என்பவர், "பத்து நாட்களாய் இரவு நேரத்தில் ஆட்டோவை வாடகைக்கு விடுவதில்லை!" என்கிறார்!

சரி. இதனால் ஆட்டோ டிரைவர்கள் வெறுப்பாய் இருக்கிறார்களா? பெரும்பாலான ஆட்டோ ஸ்டாண்டுகளில் நாம் விசாரித்த வகையில், "நைட் பத்து மணி வரைக்கும் ஓட்டலாம்ங்க. நைட் ஃபுல்லாவும் ஓட்டலாம். என்ன... அங்கங்க விசாரணை கொஞ்சம் அதிகமா இருக்கு. அவுங்களும் (போலீசும்), இந்த குண்டு வெடிக்கறது, நம்ப ஊர்லயே பி.ஜே.பி.யில் டாக்டர் ஸ்ரீதரைக் கொலை செஞ்சதுன்னு சம்பவங்கள் நடக்கவும்தாங்க இவ்வளவு ஸ்டிரிக்ட்டா இருக்காங்க. இதனால எங்களுக்கு வருமானம் கொறைஞ்சது உண்மைதான். இந்த மாநாடு வரைக்கும்தானுங்களே...!" என்கிறார்கள்.

சத்திரம் பேருந்து நிலையத்தில் பிரதமர் வாஜ்பாய்க்கும் மத்திய அமைச்சர் ரங்கராஜன் குமாரமங்கலத்துக்கும் நாற்பது அடி உயர கட்-அவுட்கள் வைத்திருக்கிறார்கள். இன்னும் நான்கு இடங்களில் கட்-அவுட்கள் வைக்கப் போகிறார்கள் மாநாட்டுக் குழுவினர். விளம்பர பேனர்கள் - முக்கிய இடங்களில் திரும்பும் திசையெல்லாம். சுவரில் மாநாட்டு விளம்பர வாசகங்கள் நிறைய இடங்களில். திராவிடக் கட்சிகளுடன் இணையாகச் சொல்லும் அளவுக்குச் சுவரில் இடம்பிடித்து எழுதித் தள்ளியிருக்கிறார்கள். கல்லுக்குழி, ரயில்வே மைதானம் அருகில் மிக நீளமான காம்பவுண்டுச் சுவர் ஒன்றில் ரங்கராஜன் குமாரமங்கலம் பெயரை மட்டும் சுமார் இருநூறு அடி நீளத்துக்கும் மேலே வண்ணத்தில் எழுதியுள்ளார்கள். இதைப் பற்றியெல்லாம் பி.ஜே.பி. தீவிர அனுதாபி ஒருவர் நம்மிடமே விமர்சனம் செய்தார்.

முதல் நாள் நிகழ்ச்சி சிந்தாமணி தேசிய மேனிலைப் பள்ளி மைதானத்திலும், பேரணிக்குப் பின்னர் (இரண்டாம் நாள் நிகழ்ச்சி) பிரதமர் பேசுவது கல்லுக்குழி ரயில்வே மைதானத்திலும் என்று முடிவு செய்து பந்தல் வேலைகள் நடந்து கொண்டிருந்தன. மார்ச் 9 அன்று டில்லியிலிருந்து வந்த விசேஷ பாதுகாப்புப் படையினர், உளவுத் துறை அதிகாரிகள் அனைவரும் குறிப்பிட்ட இரண்டு மைதானங்களும் பாதுகாப்புக்கு திருப்தியில்லாத இடங்கள் என்று சொல்லி விட்டார்கள். இப்போது உடனே துரித கதியில் செயல்பட்டு, முதல்வரிடம் அனுமதி பெற்று காஜாமலை அண்ணா விளையாட்டரங்கத்துக்கு அருகே உள்ள அரசுக்குச் சொந்தமான காலி மைதானத்தை புல்டோசர் வைத்து விரைவாய்ச் சுத்தம் செய்து கொண்டு இருக்கிறார்கள்.

தாமரைப் பூவில் பாராளுமன்ற கட்டட வடிவம் நிற்பது போல் மேடை அமைய இருக்கிறது. அதில்தான் வாஜ்பாய் மாநாட்டு நிறைவுப் பேருரை நிகழ்த்தப் போகிறார்.

உற்சாகமுடன் நிறைய இளைஞர்கள் கட்சிக்குப் புதிதாய் வந்திருப்பதாகத் தகவல் தரும் விறகுக் கடை ரெங்கராஜன், (மாவட்ட செயற்குழு உறுப்பினர்), "இந்த மாநாடு எங்களது கட்சியின் வளர்ச்சிக்கு வித்திடும் மாநாடு!" என்கிறார்.

சைக்கிளில் இளநீர் வியாபாரம் செய்யும் முனுசாமி "எந்தக் கட்சி மாநாடு நடத்துனா எனக்கென்னங்க? பத்து எளநி வித்தா பத்து ரூவா கெடைக்கும்ங்க!" என்கிறார்!

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



"கூட்டணிக் கட்சிகளின் அன்பைப் பெற்ற ஆட்சி!"

சூழ்நிலையை அவ்வப்போது உருவாக்கி வந்திருப்பது, போற்றுவதற்குரியது.

இந்தியப் பிரதமர் வாஜ்பாய் அவர்களின் 50 ஆண்டுக்கால நாடாளுமன்ற அனுபவம், பலரையும் கவரக் கூடிய பேச்சாற்றல் தன்மை, தெளிவான சிந்தனையின் போக்கு, ஜனநாயக நெறியில் கொண்டிருக்கும் நம்பிக்கை, நியாயத்தை நிலை நாட்ட வேண்டும் என்பதில் கொண்டுள்ள அக்கறை, மாற்றாரையும் மதிக்கும் மாண்பு ஆகியவை



*நாவலர் இரா. நெடுஞ்செழியன்:*

இந்தியாவில் ஒரு கட்சியின் ஆட்சியை நடத்துவது என்பதே மிகக் கடினமான ஒரு செயலாகும் என்ற நிலையில், 18 கட்சிகள் கொண்ட கூட்டணி ஆட்சியைப் பிரதமர் வாஜ்பாய் அவர்கள் மிகத் திறம்பட நடத்திக் கொண்டு வந்துள்ளார் என்றுதான் சொல்ல வேண்டும்.

பாரதீய ஜனதா ஆட்சிக்கு ஆதரவு தந்து வரும் கூட்டணிக் கட்சிகள், அவ்வப்போது, தங்கள் தங்கள் கொள்கை குறிக்கோளுக்கு ஏற்ப, பிரச்னைகளை எழுப்புவதும், அவற்றிற்காக வாதாடுவதும் அவற்றை வலியுறுத்தி நடவடிக்கைகள் எடுப்பதும் தவிர்க்க முடியாத ஜனநாயக செயற்பாடுகள் ஆகும். அப்படிப்பட்ட செயல்கள் கூட்டணி ஆட்சிக்குக் குந்தகம் விளைவிப்பதாக எந்த ஒரு நிலையிலும் அமைந்ததில்லை.

# வாஜ்பாய் அரசின்

கூட்டணிக் கட்சிகளின் அன்பையும் ஆதரவையும் நட்புறவையும் பெறுவதில் வாஜ்பாய் அவர்களும், அவரைச் சார்ந்த மூத்த அமைச்சர்களும் பாராட்டத்தக்க விதத்தில் வெற்றி பெற்று, இயல்பான நல்ல ஓராண்டுக் கால ஆட்சியை, இனிதாக நடத்திச் செல்ல பேருதவியாக அமைந்துள்ளன.

பாரதீய ஜனதாக் கூட்டணி ஆட்சியானது, துவக்கத்தில் அளித்த உறுதிமொழிப்படி அரசமைப்புச் சட்டத்தில் கண்டுள்ள மதச் சார்பற்ற கொள்கை கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது; சிறுபான்



"வாஜ்பாயை நினைத்து வருத்தப்படுகிறேன்!"

## "நாட்டின் ஒற்றுமைக்கு ஆபத்து!"



மையோருக்கு உரிய பாதுகாப்பு அளிக்கத் தேவையான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. மாநிலங்களின் தனித் தன்மைகளுக்கும், தனி உரிமைகளுக்கும் பாதுகாப்பு வழங்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. சமூக நீதி அடிப்படையிலான இட ஒதுக்கீட்டு முறைக்கு ஆதரவு காட்டப்பட்டு வருகிறது; மத்தியிலும் மாநிலங்களிலும் நிதி ஆதாரங்களைப் பெருக்குவதற்கான முயற்சிகள் எடுக்கப்பட்டு வருகின்றன; இந்தியாவை எல்லா வகைகளிலும் வலிமைப்படுத்தவும், வளப்படுத்தவுமான நடவடிக்கைகள் உரிய முறையில் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. தாராளமாக்கப்பட்ட பொருளாதாரக் கொள்கை தொடர்ந்து கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது.

டாக்டர் புரட்சித் தலைவி அவர்கள் வற்புறுத்தி வரும் காவிரி நீர்ப் பங்கீட்டுப் பிரச்னையில் நிலை

# ஓராண்டு!

யான தீர்வு காண வேண்டும், தமிழ்நாட்டில் கடைப்பிடித்து வரும் 69 சதவிகித இட ஒதுக்கீட்டு முறைக்கு அரசமைப்புச் சட்ட பாதுகாப்பு வேண்டும்; தமிழ் உள்ளிட்ட முக்கிய தேசிய மொழிகள் இந்தியாவின் ஆட்சி மொழிகளாக ஆக வேண்டும்; சேதுக் கடல் கால்வாய்த் திட்டத்தை நடைமுறைப் படுத்த வேண்டும்; பெண்களுக்குப் பொதுத் துறைகளிலும், சட்டமன்ற-நாடாளுமன்றத் துறைகளிலும் 33 சதவிகித ஒதுக்கீட்டிற்கு அரசமைப்புச் சட்டத்தின் மூலம் வழிவகை காண வேண்டும்; நதி நீர் நிலைகளைத் தேசிய மயமாக்க வேண்டும்; பெரியாறு அணைக்கட்டின் உயரத்தை 136 அடியிலிருந்து 152 அடியாக உயர்த்த வழிவகை காண வேண்டும் என்பன போன்ற கோரிக்கைகளை நடைமுறைப்படுத்த பாரதீய ஜனதாக் கூட்டணி அரசு உறுதிமொழியளித்து, அதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டிருப்பது மகிழ்ச்சி தருவதாகும்.

இந்தியா-பாகிஸ்தான் இடையே நல்லுறவை வலுப்படுத்தவும், இந்தியா-சீனா, இந்தியா-இலங்கை ஆகியவற்றின் நல்லுறவை வளர்க்கவும் வாஜ்பாய் மேற்கொண்டுள்ள முயற்சிகள் வரவேற்கத்தக்கனவாகும்.

எதிர்த் தரப்பினரின் ஏச்சல், கூச்சல், குழப்பம், குதர்க்க வாதம், விதண்டாவாதம், ஆர்ப்பாட்டம், போராட்டம், வன்முறை நடவடிக்கைகள், முட்டுக்கட்டைகள் ஆகியவற்றையெல்லாம் சமாளித்து, பாரதீய ஜனதாக் கூட்டணி சென்ற ஓராண்டுக் காலம் ஆட்சி புரிந்து வந்திருப்பதும் இனி வருங்காலத்தில் நிலைமைகளைச் சமாளிக்க எண்ணித் திட்டமிட்டு வருவதும் மிகப் பெரிய சாதனைகள் என்றே சொல்ல வேண்டும்!

**சட்ட அமைச்சர் ஆலடி அருணா:**

**வா**ஜ்பாயைப் பொறுத்த மட்டில் நல்லவர்; சிறந்த ஜனநாயகவாதி. பாராட்டத்தக்க குணம் படைத்தவர். அவரது வழிகாட்டுதலில் போடப்பட்ட காவிரி ஒப்பந்தம் தாற்காலிகமான ஒரு தீர்வாக இருந்தாலும் பாராட்டத்தக்கது. அதை ஒரு

## "வாஜ்பாய் ஓர் உயர்ந்த தலைவர்!"



## "நம்பிக்கை ஒளியேற்றும் நல்லவரின் ஆட்சி!"

சாதனை என்று கூடச் சொல்லலாம். அதே போல் கிடப்பில் இருந்த சேது சமுத்திர திட்டத்தை விரைந்து செயல்படுத்துவதற்கான முதல் நடவடிக்கையாக பட்ஜெட்டில் குறிப்பிட்டு இருப்பதும் பாராட்டும்படியான சாதனைதான்!

ஆனால் வாஜ்பாய் அரசின் அரசியல் ரீதியான அணுகுமுறை மத வெறியாளர்களை ஊக்குவிக்கும் வகையிலும், சிறுபான்மையினர் உரிமைகளுக்குக் குந்தகம் விளைவிக்கும் முறையிலும் இருந்து வருகின்றன. குஜராத், ஒரிஸ்ஸா, போன்ற மாநிலங்களில் கிறிஸ்துவர்கள் தாக்கப்பட்டது 'பரிவாரங்களின்' செயல்கள் தான் என்றாலும் அதை மூடி மறைப்பது போல, கண் துடைப்புக்காகக் கண்டித்தது. தீய சக்திகளுக்குத் துணை போவதை வெளிச்சம் போட்டுக் காட்டி விட்டது!

'ஊழலை ஒழிப்போம்' என்று கூச்சல் போடும் வாஜ்பாய் அரசு அந்தரங்கத்தில் ஊழல்களோடு கை கோத்துக் கொண்டு, அவற்றுக்குப் பாதுகாப்பு கொடுக்கிறது. ஜெயலலிதா மீதுள்ள அந்நியச் செலாவணி வழக்கு, வருமானவரி வழக்கு ஆகியன குறித்து வாஜ்பாய் அரசு வாய் திறக்காதது மட்டுமல்ல; நிர்ப்பந்தம் காரணமாக அந்த வழக்குகளைக் கைவிடும் வகையில் செயல்பட்டு வருகிறது. ஏதோ ஜனநாயகத்தின் காவலர்கள் போல் இயங்கி, இவர்கள் பீகாரில் பிரகடனப்படுத்தப்பட்ட ஜனாதிபதி ஆட்சியை வாபஸ் வாங்கவில்லை. ராஜ்ய சபையில் அங்கீகாரம் கிடைக்காதே என்பதால் தான் திரும்பப் பெற்றிருக்கிறார்கள். பொருளாதாரத் துறையிலும் குறிப்பிட்டுச் சொல்லும்படி ஏதுமில்லை. யூரியா, டீசல் ஆகியவற்றின் விலையை உயர்த்தி விவசாயிகளின் வயிற்றெரிச்சலை வாங்கிக் கட்டிக் கொண்டிருக்கிறது பா.ஜ.க. ஆட்சி.

இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்தி நல்லது செய்ய வேண்டும் என்று முயற்சி செய்யாமல், எந்த வகையிலாவது செயல்பட்டு ஆட்சியை நீடிக்க வைப்பதே அவர்களது முழு நேர வேலையாக இருக்கிறது. எந்தக் கோணத்தில் இருந்து பார்த்தாலும் பாராட்டத்தக்க அம்சங்கள் அதிகமாக இல்லை. வாஜ்பாய் சூழ்நிலையின் கைதியாகத் தடுமாறுவதைப் புரிந்து கொள்ள முடிகிறது. நல்லவராக இருக்கும் வாஜ்பாய் வல்லவராக இல்லையே என்று நானும் வருத்தப்படுகிறேன்.

**வைகோ** *(பொதுச் செயலாளர், மறுமலர்ச்சி தி.மு.க.):*

**கா**ங்கிரஸ் மற்றும் பத்து மாதம் ஏழு மாதம் என்று ஓராண்டு கூட தாக்குப்பிடிக்க முடியாத தேவேகௌடா, குஜ்ரால் ஆகியோரின் ஐக்கிய முன்னணி அரசுகள் கையாண்ட தவறான கொள்கைகளினால் இந்தியப் பொருளாதாரம் கடுமையான வீழ்ச்சியை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. சர்வதேச அரங்கில் ஏற்பட்டுள்ள பொருளாதார வீழ்ச்சியினால் பல கிழக்காசிய நாடுகள் நொறுங்கிப் போய்விட்டன. உலக வர்த்தகச் சந்தையில் அமெரிக்காவுக்கே சவால் விட்டுக் கொண்டிருந்த ஜப்பான் கூட மீளமுடியாமல் சிக்கித் தவிக்கிறது. இந்த நிலையில் வாஜ்பாய் அரசு பொறுப்பேற்று கடந்த ஓராண்டு காலத்திற்குள் மேற்கொண்ட உறுதியான நடவடிக்கைகளின் காரணமாக இந்தியப் பொருளாதாரம் வீழ்ச்சியிலிருந்து பாதுகாக்கப்பட்டு சீர்படுத்தப்பட்டுள்ளது.

போக்ரானில் அணு ஆயுத சோதனைகளை வெற்றிகரமாக நடத்திக் காட்டியதன் மூலம் இந்தியா ஓர் அணு ஆயுத வல்லரசு என்பது உலகத்திற்குப் பறை சாற்றப்பட்டுள்ளது. இச் சோதனைகள் உலக அரங்கில் இந்தியாவுக்கு கௌரவத்தையும், இந்தியர்களுக்குப் பெரும் மதிப்பையும் ஏற்படுத்திக் கொடுத்துள்ளது.

பெர்லின் சுவர் உடைக்கப்பட்டபோது ஜெர்மானிய மக்களின் உள்ளத்தில் எத்தகைய உவகைக் கிளர்ச்சி ஏற்பட்டதோ... அதைப் போல் இந்திய பிரதமர் வாஜ்பாய் அவர்கள் எல்லைக் கோட்டை கடந்து பாகிஸ்தானுக்கு மேற்கொண்ட பஸ் பயணம், இந்து முஸ்லீம் என்று விதைக்கப்பட்ட துவேஷக் கோட்டை அழித்து இரு

நாட்டு மக்களின் உள்ளத்தில் மகிழ்ச்சி அலையெழுப்பியது. இது பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய ஒரு வரலாற்று நிகழ்வாகும். பதினொரு ஆண்டுகளுக்குப் பிறகு இந்திய பாகிஸ்தான் கிரிக்கெட் போட்டிகள் வெற்றிகரமாக நடைபெற்றதற்கு பிரதமர் வாஜ்பாய் அவர்களின் உறுதியான முடிவுகளே காரணமாகும்.

அதேபோல் மற்றொரு அண்டை நாடான பங்களாதேஷுக்கும் மார்ச் 15ம் தேதி முதல் பேருந்து பயணம் துவங்க இருப்பது துணைக் கண்டத்தில் அமைதியையும் நல்லுறவையும் வளர்க்கின்ற மகிழ்ச்சியளிக்கும் செய்தியாகும். மதவாத பாரதிய ஜனதா ஆட்சிக்கு வந்தால் அண்டை நாடுகளுடன் நல்லுறவு இருக்காது என்று செய்யப்பட்ட பிரசாரத்தை பிரதமர் வாஜ்பாய் அவர்களின் நடவடிக்கைகள் முறியடித்துவிட்டன.

138 ஆண்டுகளாகக் கிடப்பிலே போடப்பட்ட தமிழ் மக்களின் நீண்டகாலக் கனவான சேது சமுத்திரக் கால்வாய் திட்டத்தை நிறைவேற்றுவோம் என்று மறுமலர்ச்சி பேரணியின் கடற்கரை பொதுக் கூட்டத்தில் பிரதமர் வாஜ்பாய் அவர்கள் அறிவித்தார். அதற்கான பூர்வாங்க வேலைகள் நடைபெற்று வருகின்றன. இதைத் தாங்கமுடியாத சிலர் குதர்க்கம் பேசி தங்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டுகின்றனர்.

சுதந்திரத்திற்குப் பின்னர் கடந்த 50 ஆண்டுகளில் இதற்கு முன் வேறு எந்த பட்ஜெட்டிலும் ஒதுக்கப்படாத அளவிற்கு, இந்த ரயில்வே பட்ஜெட்டில் தான் தமிழக ரயில்வே திட்டங்களுக்கு அதிக நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

பீகார் மாநிலத்தில் மாநில அரசால் தடுத்து நிறுத்த முடியாத அளவிற்கு தலித் மக்கள் படுகொலைச் சம்பவங்கள் தொடர்ந்ததனால் அங்கு மத்திய ஆட்சி கொண்டு வரப்பட்டது. பீகாருக்குச் சென்ற போது ராஷ்ட்ரீய ஜனதா தள அரசு பதவியில் நீடிக்க தார்மீக உரிமை இல்லை என்று கருத்துத் தெரிவித்த காங்கிரஸ் கட்சித் தலைவர் சோனியா, பின்னர் இரட்டை வேடம் பூண்டு நாடாளுமன்றத்தில் இந்த ஆட்சியை வீழ்த்தி விடலாம் என்று திட்டம் போட்டுச் செயல்பட்டார். லோக் சபாவில் நடைபெற்ற வாக்கெடுப்பில் 29 ஓட்டுகள் வித்தியாசத்தில் தீர்மானம் வெற்றியடைந்தது அரசின் மீதான நம்பிக்கை வாக்கெடுப்பாகவே அமைந்தது.

பஜ்ரங்தள், விஸ்வ இந்து பரிஷத் போன்ற அமைப்புகளின் செயல்பாடுகள், அறிக்கைகள் கண்டனத்திற்குரியதாகும். குஜராத்தில் தேவாலயங்கள் தாக்கப்பட்டதும், ஒரிஸ்ஸாவில் கிறிஸ்தவ மிஷனரியன் கொளுத்தப்பட்டதும் கண்டனத்திற்கும் வேதனைக்குமுரிய சம்பவங்களாகும். ஆனால் தொடர்ந்து எந்த விதமான மதக் கலவரங்களும் ஏற்படாத அளவிற்கு அரசின் நடவடிக்கைகள் அமைந்துள்ளன.

பிரதமர் வாஜ்பாய் அவர்கள் மனிதாபிமானம் நிறைந்த ஓர் உயர்ந்த தலைவர் ஆவார். இருபதாம் நூற்றாண்டின் அந்திப் பொழுதில் இருக்கின்ற நாம், பிரதமர் வாஜ்பாய் அவர்களின் சீரிய தலைமையில் இருபத்தொன்றாம் நூற்றாண்டின் வைகறையை நம்பிக்கையோடு சந்திக்கிறோம் என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி.

***சங்கரய்யா, (மாநிலச் செயலாளர், மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தமிழ் மாநில குழு):***

**பா**.ஜ.க. ஆட்சி நீடிக்கும் ஒவ்வொரு நிமிடமும், நமது ஒற்றுமைக்குச் சோதனை வந்து கொண்டே இருக்கும். நமது நாட்டின் சிறப்பே வேற்றுமையில் ஒற்றுமைதான். ஆனால் இந்த 'சங்க' அமைப்புகள் பெரும்பான்மை சமூகத்தைச் சிறுபான்மையோருக்கு எதிராகத் திருப்பி விடும் போக்கைத் தொடர்ந்து கையாண்டு வருகின்றன. இது மிகவும் ஆபத்தான போக்கு.

பீகார் ஆட்சிக் கலைப்புத் தீர்மானம் ராஜ்ய சபையில் நிறைவேறாது என்பது தெரிந்தும், அங்கு ஜனாதிபதி ஆட்சியை அமல்படுத்தியது, ஜனநாயக மோசடி. ஜனாதிபதி ஆட்சி என்ற பெயரில் ஆர்.எஸ்.எஸ். ஆட்சியை அமல்படுத்த நினைத்த பா.ஜ.க.- சமதா கூட்டணிக்குச் சம்மட்டி அடி. ஜனநாயக சக்திகளுக்குப் பெரிய வெற்றி.

சாதனைகள் என்று சொல்லும்படியாக ஏதுமில்லை. சேது சமுத்திரத் திட்டத்துக்கு ஆய்வுக்காக பணம் ஒதுக்கியிருப்பதாகச் சொல்கிறார்கள். ஆய்வெல்லாம் முடிந்து விட்டது. திட்டத்தைத் துவங்கத்தான் பணம் ஒதுக்க வேண்டும். பொதுத்துறை நிறுவனத்தின் கோடிக்கணக்கான பங்குகளை அடிமாட்டு விலைக்கு விற்றது மன்னிக்க முடியாத குற்றம். அதேபோல்

# "ஜனநாயக மரபுகளுக்கு மதிப்பில்லை!"



காப்பீட்டுத் துறையை தனியாருக்கு மாற்ற நினைப்பது! தெளிவான பொருளாதாரக் கொள்கைகள் ஏதுமில்லாமல் புயலில் அகப்பட்ட கப்பல் போல் தடுமாறுகிறது பா.ஜ.க. ஆட்சி. சர்வதேச நிதி நிறுவனங்களின் அழுத்தத்துக்கு வளைந்து கொடுத்துச் செயல்படுவதன் மூலம், நமது நாட்டை அந்நிய சக்திகளுக்கு அடிமைப் படுத்துகிறது.

நமது நாட்டின் கலாசார அடித்தளத்தைச் சிதைப்பதில் சங்க அமைப்புகள் தீவிரம் காட்டி வருகின்றன. அவர்களுக்கும் சுதந்தர போராட்டத்திற்கும் தொடர்பே கிடையாது. ஆனால் வரலாற்றை மாற்றி எழுத குழு அமைத்திருக்கிறார்கள். இந்த வகுப்புவாத ஆட்சியை, அ.தி.மு.க., ம.தி.மு.க., பா.ம.க, போன்ற பகுத்தறிவுப் பாசறையில் வந்த கட்சிகள் ஆதரிப்பதுதான் விந்தை. இவர்கள் தங்கள் ஆதரவை உடனே வாபஸ் வாங்க வேண்டும். இல்லையேல் சரித்திரம் இவர்களை மன்னிக்காது.

**நல்லகண்ணு, (மாநில செயலாளர், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி, தமிழ் மாநிலக் குழு):**

இந்த ஒரு வருட பா.ஜ.க. ஆட்சியில் சாதனைகளை விட மக்களுக்கு வேதனைகளும், சோதனைகளுமே மிஞ்சி நிற்கின்றன. பட்ஜெட் வருவதற்கு முன்பே அரிசி, கோதுமை, சமையல் வாயு போன்றவற்றின் விலையை ஏற்றினார்கள். பட்ஜெட்டுக்குப் பிறகும் நிர்வாக உத்தரவுகள் மூலம், பல கட்டணங்கள் உயர்த்தப்படுகின்றன. பாராளுமன்ற ஜனநாயகத்தில் நம்பிக்கையில்லாத போக்கையே இவை காட்டுகின்றன.

கூட்டணிக் கட்சிகள் கொடுக்கும் 'அன்புத்' தொல்லைகள் காரணமாக நீதி நிர்வாகத்தில் தலையீடு; 356ஐ பயன்படுத்தி ஆட்சிக் கலைப்பு என்று ஜனநாயக விரோதப் போக்கு வளர்கிறது. கப்பற்படை தளபதி விவகாரத்தில் தலையிட்டு அதிலும் குழப்பம். நாட்டின் பாதுகாப்பை கவனிக்க வேண்டிய அமைச்சர் அந்தப் பணி தவிர மீதம் அனைத்தும் செய்கிறார். சங்கக் குடும்பத்தின் மேலிடத் தலையீட்டின் காரணமாக மதக் கருத்துக்கள் திணிக்கப்படுவதும், சிறுபான்மையோர் தாக்கப்படுவதும் தொடர் நிகழ்ச்சிகளாகின்றன.

விலைவாசியைக் குறைக்க ஆக்கபூர்வமான நடவடிக்கைகள் இல்லை. பொக்ரானில் குண்டு வெடித்ததால் நமக்கு இழப்புகளே அதிகம். நமது விஞ்ஞான முன்னேற்றத்தை வெளிக்காட்ட வேறு துறைகள் இருக்கின்றன. காவிரி விவகாரத்தில் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு ஏற்படாவிட்டாலும், பிரதமர் எடுத்த முயற்சி பாராட்டத்தக்கது. பாகிஸ்தானுடன் நல்லுறவை வளர்த்துக் கொள்ள பஸ் பயணம் மேற்கொண்டதையும் பாராட்டலாம்.

**ஜனா கிருஷ்ணமூர்த்தி, (அகில இந்தியத் துணைத் தலைவர் பா.ஜ.க.):**

இந்த ஆண்டின் சாதனைகளை கணக்கிடும்போது, மத்திய அரசு ஒரு கட்சியினால் ஆளப்படுவதல்ல; 18 கட்சிகளின் கூட்டணி ஆட்சி என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். "காங்கிரஸ் மட்டுமே மத்தியில் ஒரு நிலையான நல்ல ஆட்சி தர முடியும் என்ற 'தோற்றத்தை' மாற்றி, மாறுபட்ட கொள்கைகள் உடைய தலைவர்களைக் கொண்ட ஒரு நிலையான ஆட்சியைக் கொடுக்க முடியும் என்று நிரூபித்து வரும் ஆட்சி இது. பல்வேறு கடினமான சூழ்நிலைகள் இருந்த போதும், வாஜ்பாய் அவர்கள் அவற்றை வெற்றிகரமாக சமாளித்துச் செயல்பட்டு வருகிறார்.

சாதனைகள் பல இருந்தாலும் ஒரு சிலவற்றை மட்டுமே இந்த சந்தர்ப்பத்தில் சொல்கிறேன். பொக்ரானில் குண்டு வெடித்து உலக நாடுகளின் மதிப்பைப் பெற்றது இந்த ஆட்சியே. இதன் காரணமாக அமெரிக்கா போன்ற நாடுகள் பொருளாதாரத் தடை போன்ற பல்வேறு நிர்ப்பந்தங்களை உருவாக்கினாலும், சவால்களைச் சந்தித்து வருகிறது இந்த அரசு. பொருளாதாரத் தடை போட்டு நம்மை மிரட்ட நினைத்த நாடுகள் கூட, நமது உறுதிமிக்க நிலையைப் பார்த்து தங்கள் அணுகு



## “மக்கள் நம்பிக்கையைப் பாழடித்த ஆட்சி!”

முறையை மாற்றிக் கொண்டிருக்கின்றன.

வெளிநாட்டு விவகாரத்திலும் ஒரு புதிய சாதனையைப் படைத்து வருகிறது வாஜ்பாய் அரசு. கூட்டு சேரா மாநாடு, வளர்ச்சியடைந்த நாடுகள் மாநாடு, சார்க் மாநாடு போன்றவற்றில் வாஜ்பாய் அவர்களின் அணுகுமுறை காரணமாகவும், கருத்துக்களினாலும் கவரப்பட்டு, பல்வேறு நாடுகள் நம்முடன் மிகவும் நெருங்கி வந்திருக்கின்றன. அதே போல் அண்டை நாடுகளான ஸ்ரீலங்கா, நேபாளம் ஆகியவைகளுடன் உறவைப் பலப்படுத்தும் விதத்தில் பல புதிய ஒப்பந்தங்களை செய்துள்ளோம். அதேபோல் பாகிஸ்தானுடன் பரஸ்பர நலன்கள், மற்றும் நல்லெண்ணத்தின் அடிப்படையில் நல்லதொரு உறவை உருவாக்க பஸ்ஸில் லாகூருக்குப் பயணம் மேற்கொண்டது நமக்கு மிகுந்த மதிப்பை ஏற்படுத்தியுள்ளது.

பொருளாதாரத் துறையிலும் நல்ல திருப்புமுனை ஏற்படுத்தி இருக்கிறது, இந்த வருட பட்ஜெட். இதற்கு முந்தைய அரசுகள் அவ்வப்போது உண்டாகும் பிரச்னைகளுக்கு ஏற்ப தாற்காலிக பரிகாரங்களை பட்ஜெட்டில் அறிவிக்கும். ஆனால் இந்த வருட பட்ஜெட் நமது நாட்டின் அடிப்படை பிரச்னைகளுக்கு தீர்வு காணும் விதமாகப் போடப்பட்டுள்ளது. முந்தைய எந்த அரசுகளும் செய்யாத வகையில் பஞ்சாயத்துக்களுக்கு அதிக சுதந்திரத்தையும் நிதி ஆதாரங்களையும் உருவாக்கித் தரும் வகையில் போடப்பட்ட பட்ஜெட் இது. இந்த வாய்ப்புகளை மாநில அரசுகள் முழுமையாகப் பயன்படுத்துமேயானால், மகாத்மா கண்ட கிராம ராஜ்யம் 21ம் நூற்றாண்டில் கண்டிப்பாக உருவாகும்.

மற்றபடி பீகார் விவகாரம் உட்பட வேறு பல பிரச்னைகளில், அரசியல் காழ்ப்புணர்ச்சியோடு எதிர்க்கட்சிகள் பேசி வருவதற்குச் சரியான பதில்களும் எங்களிடம் உண்டு.

***திண்டிவனம் ராமமூர்த்தி (தலைவர், தமிழ்நாடு இ. காங்கிரஸ்):***

**கா**ங்கிரசுக்குச் சரியான மாற்றுக் கட்சி இதுதான்; பாரதீய ஜனதா கட்சி ஒரு நிலையான ஆட்சியைத் தரும்-கொள்கை அடிப்படையிலான லஞ்ச ஊழலற்ற மேலான ஒரு ஆட்சியைத் தரும்; நாட்டின் எதிர்காலம் சிறப்பாக இருக்கும் என்றெல்லாம் மத்திய அரசு பற்றி நாட்டு மக்கள் ஆருடம் கணித்துக் கொண்டிருந்தனர். தமிழகத்தை பொறுத்த வரையிலும் அந்த ஆருடம் ஆரம்பத்திலேயே பொய்த்துப் போயிற்று.

அமைச்சரவை என்றால் அதற்கொரு கூட்டுப் பொறுப்பு உண்டு. பிரதமருக்கு அடங்கியவர்கள்; அவருக்கு பதில் சொல்ல வேண்டியவர்கள் என்கிற ஜனநாயக கோட்பாடு காணாமல் போய் விட்டது. ஒவ்வொரு மத்திய அமைச்சரும் தனித் தனியே-தான்தோன்றித் தனமாகச் செயல்பட முடியும்; பிரதமரால் அவர்களை ஏதும் செய்ய முடியாது என்கிற நிலை நாட்டு மக்கள் மத்தியில் வியப்பை உருவாக்கியது! ஆனால் மத்திய அமைச்சர்களுக்குள்ளேயே ஒருவரையொருவர் இயலாமை குறித்தும் லஞ்ச ஊழல் பற்றியும், குற்றம் சாட்டி பேசுவதைக் கண்ட பொழுது நாட்டு மக்களுக்கு வேதனை கலந்த நகைச்சுவை மிளிரும் அரசாகவே பாரதீய ஜனதா ஆட்சி அமைந்துள்ளது!

எல்லாவற்றிற்கும் மேலாக பிரதமர் அலுவலகமே லஞ்சத்துக்கு ஆட்பட்டு இருக்கிறது என்ற குற்றச்சாட்டை பாரதீய ஜனதா ஆட்சியை தாங்கிப் பிடித்துக் கொண்டிருக்கிற கூட்டணி ஆட்சியே முன் வைத்தது. அதனையும் தாங்கிக் கொண்டு அந்தக் கட்சியின் அமைச்சர்கள் மீது நடவடிக்கை எடுக்க முடியாமல் செயல்படுகிற பிரதமர் வாஜ்பாய், தம்முடைய தனித்தன்மையையும், தன்மானத்தையும் இழந்தாலும் பரவாயில்லை; பதவியைக் காப்பாற்றிக் கொண்டால் போதும் என்கிற அவல நிலையில் நிற்பதை நாடு கண்டது. பாரதீய ஜனதா ஆட்சி அணுகுண்டு வெடித்ததை ராஜ தந்திரம் என்றது. ஆனால் உலக நாடுகளின் எரிச்சலையும் விரோதத்தையும் மட்டுமே நாட்டுக்குத் தந்தது! ஓர் ஆட்சி எப்படி நடைபெறக் கூடாது என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு, வாஜ்பாய் ஆட்சி.

தொகுப்பு: **ப்ரியன்**

## 'தியாகபூமி' – வானொலி வடிவம் :

# "இந்த வெற்றி ஒரு வரப்பிரசாதம்!"

கல்கியின் 'தியாக பூமி', வானொலியில் தொடர்ந்து 26 வாரங்கள் நாடகமாக ஒலிபரப்பப்பட்டது. நாடகத்துக்கு அமோக வரவேற்பு. நாடக வடிவம் கொடுத்தவர் பழம் பெரும் எழுத்தாளர் 'மாயாவி'.

"முதலில் 22 வாரம் வருகிற மாதிரிதான் பிளான் பண்ணி இருந்தேன். கடைசியில் 26 வாரம் வரை வந்து விட்டது. ஆகஸ்ட் 98-ல் ஒரு புதன் கிழமையன்று ஒலிபரப்ப ஆரம்பித்தார்கள். இந்த பிப்ரவரி வரை தொடர்ந்தது. மீண்டும் விரைவில் மறு ஒலிபரப்பும் ஆகப் போகிறது" என்றார் மாயாவி. "ஏழெட்டு எழுத்தாளர்களிடம் பயோடேட்டா கேட்டிருந்தார்கள். கடைசியில் என்னிடம் அந்தப் பணியைக் கொடுத்தார்கள். ஒரு புகழ்பெற்ற எழுத்தாளரின் படைப்புக்கு நாடக வடிவம் கொடுக்கிற பெரும பாக்கியம் எனக்குக் கிடைத்தது. வேதப் புத்தகத்தைக் கையாள்கிற மாதிரிதான் இதை நான் கையாண்டேன்!"



• மாயாவி

'மாயாவி' தென்காசியில் பள்ளியில் படிக்கிற காலத்தில் 'தியாக பூமி' தொடராக ஆனந்த விகடனில் வெளிவந்து கொண்டிருக்காராம். கடையில் வாங்கியதும் அங்கேயே நின்று படித்து விட்டுத்தான் வீட்டுக்கு எடுத்துக் கொண்டு வருவாராம். "நாடகமாக்கும்போது எனக்கு இது தான் நினைவுக்கு வந்தது!"

கல்கியின் வசனங்கள் எதையும் மாற்றாமல் அப்படியே கையாண்டதாகச் சொன்னவரிடம், "நாடகத்துக்காகப் புதிய கேரக்டர் எதையும் சேர்த்தீர்களா?" என்று கேட்டோம்.

"ஆமாம். தியாகராஜன் என்று ஒரு பாத்திரம் உருவாக்க வேண்டியதாயிற்று. சாவித்திரி பிரசவம் ஆகி, குழந்தையுடன் நர்ஸிடம் வருகிறாள். குழந்தை இல்லாத பெண்ணுக்கே யாரும் வேலை கொடுப்பதில்லை. உன்னிடம் குழந்தை வேறு இருக்கிறது. என்னாலும், இனிமேலும் உன்னையும், குழந்தையையும் வைத்துக் காப்பாற்ற முடியும் என்று தோன்றவில்லை'– என்று நர்ஸ் சொல்கிற மாதிரி அமைத்தேன். அவள் நிர்க்கதியாக நிற்கிற அந்தச் சமயத்தில், தியாகராஜன் என்ற பாத்திரத்தை க்ரியேட் பண்ணினேன். 'என் வீட்டில் தங்கிக் கொள். படுத்த படுக்கையாகிவிட்ட என் மனைவிக்கு உதவி செய்து கொண்டு உன் குழந்தையுடன் நீ இந்த வீட்டில் இருக்கலாம்' – என்று சொல்கிற மாதிரி வசனமும் உருவாக்கினேன்" என்றார்.

தியாகபூமியின் அதிமுக்கிய கதாபாத்திரம் சம்பு சாஸ்திரி. வானொலியில் சம்பு சாஸ்திரியாக நடித்தவர் மேஜர் சுந்தர்ராஜன்.

"இந்த கேரக்டரை நான் செய்யறதா முடிவானவுடனேயே என் மனைவி, 'பாப நாசம் சிவன் படு ஒல்லியான மனிதர். சினிமாவில் அவர் சம்பு சாஸ்திரியா நடிச்சார்; அந்தத் தோற்றம் மக்கள் மனசுல பதிஞ்சிருக்கும். கதையிலேயே அந்த கேரக்டர் ஒல்லிதான். ஆனா ...ாபுலர் நடிகரான நீங்க இதுக் ...க் குரல் கொடுக்கிறபோது, ...ந்தக் குரலும் உங்க குண் ...த் தோற்றமும் மக்களுக்கு மனசுல ஞாபகம் வந்து, கதையோடு ஒன்றச் செய்வதைத் தடுக்குமே?' என் ...றாள்.

"நானும் இதைப் பற்றிக் கவலைப்பட ஆரம்



• 'தியாகபூமி' வானொலி நாடகத்தின் போது...

பித்தேன். ஆனால் மக்கள் என்னை சம்பு சாஸ்திரியாக ஏற்றுக் கொண்டுவிட்டதில் ரொம்ப மகிழ்ச்சி". என்றார் மேஜர்.

"இந்த கேரக்டரில் நடிக்கையில் மிக வினோதமான 'அனுபவம் ஒன்று நேர்ந்தது. எனக்கு சங்கீதம் ஒரு அட்சரம் கூடத்தெரியாது. ஆனால் சம்பு சாஸ்திரி பஜனைப் பாடல்களையெல்லாம் பாடுபவர். வானொலி நிலையத்தார் திடீர் திடீரென்று, 'என்ன மேஜர் சார், ஒரு பாட்டு வருது, பாடறீங்களா?' என்று பயமுறுத்துவார்கள்!" என்று தமாஷாகக் குறிப்பிட்ட மேஜர், "ரொம்ப பயந்து பயந்து நடித்தேன். ஆனால் பெரிய வெற்றி கிடைத்து விட்டது. கடைசி நான் ரெக்கார்டிங் முடிந்தபோது, 'ஐயோ முடிந்து விட்டதே' என்று ரொம்ப ஏக்கமாக இருந்தது!" என்கிறார் நெகிழ்ந்தவாறு.

— நம்பி

— தேவ் ஆனந்த் சிறப்பு பேட்டி

**பாலி ஹில்லின் அந்த பிரும்மாண்ட ஆபீஸ் அறையில் நாம் நுழைந்தபோது, தேவ் ஆனந்த் தமது "யூனிட்"டைச் சேர்ந்தவர்களின் தகராறுக்கு ஏதோ தீர்ப்பு வழங்கிக் கொண்டிருந்தார். வந்திருந்தவர்கள், இவர் தீர்ப்பை ஏற்று, (என்.டி.ஆர். தரிசன ஸ்டைலில்) இவர் காலைத் தொட்டுக் கும்பிட்டு, மலர்ச்சியுடன் அகன்றனர். இவர் அடல்ஜி குழுவுடன் மேற்கொண்ட லாகூர் பஸ் பயணம், இதே போல் வெற்றி பெறுமா என்பதைத் தெரிந்து கொள்ள, இதோ, இந்த 75 வயது இளைஞரின் உற்சாக பேட்டி.**

**"இந்திய டெலிவிஷனில் இடம் பெற நீங்கள் முயற்சித்தீர்களா அல்லது அரசே அழைப்பு விடுத்ததா?"**

"அரசிடமிருந்து எனக்கு ஃபோன் கால் வந்த அந்த நிமிடங்களை நான் எப்படி மறக்க முடியும்? நான், அன்று நடைபெற இருந்த ஷூட்டிங்கைப் பற்றிய சிந்தனைகளுடன், குளித்துக் கொண்டிருந்தேன். 'பி.எம். ஆபீஸ் விருந்து ஃபோன் என்றதும் எனக்குத் தலை கால் புரியவில்லை; அங்கிருந்து ஃபாக்ஸ் வந்ததும், மற்ற எல்லா நிகழ்ச்சிகளையும் கான்சல் செய்துவிட்டு, இதற்கு ஓ.கே. சொல்லி, இரண்டே நாளில் ஏற்பாடு களை முடித்துவிட்டேன்."

**"முழுவதுமாக சந்தோஷச் சிறகடித்தீர்களா? இல்லை, மனசுக்குள் தீவிரவாதிகள் பயத்தைப் பற்றிய பட்டாம்பூச்சிகள் படபடத்தனவா?"**

"ஊஹூம்! பயமேயில்லை; திரைப்படத்துறையில்தான் 'ரிஸ்க்' எடுப்பது சர்வ சாதாரணமாயிற்றே? அரை நூற்றாண்டுப் பகையை அரைமணி நேரப் பயணம் முற்றுப் பெற வைக்க வேண்டுமே என்ற ஆவல் கலந்த ஏக்கம்தான் மிதமிஞ்சியிருந்தது."

**"பஸ் பயணத்தைக் கொஞ்சம் விவரியுங்களேன்..."**

"பஸ்ஸுக்குள் முதல் அடி வைத்த போதே புல்லரித்தது; நல்லிணக்கத்துக்கு இது முதல் படி என்ற நினைவுடனே அடுத்த அடியை எடுத்து வைத்தேன். வழி எல்லாம், இரு மருங்கும் பச்சைப் பசேலென்ற செழுமையான காட்சிகள். பஞ்சாப் பொன் விளையும் பூமியாயிற்றே! நிறைய குழந்தைகள், இருநாட்டுக் கொடிகளையும் வைத்துக் கொண்டு கையசைத்த காட்சியை கண்களால் க்ளிக்கி, மனத்திரையில் பதித்துக் கொண்டேன். ஆங்காங்கே பாங்க்ரா நடனம் வேறு! பஸ்ஸில் எல்லோர் கழுத்தும் தொண்ணூறு டிகிரியில் திரும்பியிருந்தது. வெளியே வைத்த கண்ணை உள்ளே இழுக்க மனமே வரவில்லை!"

**"அங்கே- வரவேற்பில்- உள்ளார்ந்த உற்சாகம் தெரிந்ததா?"**

"ஓ! நவாஸ் ஷெரீஃபும் அவர் சகாக்களும், இருகரம் நீட்டி, மனமாரத் தழுவிக் கொண்டனர். என்னிடம் ஸ்பெஷலாக, 'நான் உங்கள் படங்களை எல்லாம் பல முறை பார்த்திருக்கிறேன்; நானும் நீங்கள் படித்த லாகூர் கவர்மெண்ட் காலேஜில் தான் படித்தேன்' என்ற போது எனக்கு

# பஸ்-டு-



சிலிர்த்தே விட்டது! அப்புறம் 21 கன் ஸல்யூட், கார்ட்-ஆஃப்- ஆனர், இரு நாட்டின் தேசிய கீதம் என்று தடபுடலான வரவேற்பு. வாஜ்பேயி அங்கிருந்து ஹெலிகாப்டரில் சென்றார்; நாங்கள் தரை மார்க்கமாகச் சென்றோம்."

**"மூன்று சர்வீஸ் சீஃப்களும், இந்தியக் குழுவை வரவேற்க வாகா எல்லைக்கு வராதது குறையாகத் தெரியவில்லையா?"**

"அதுதான் அப்புறம் அளிக்கப்பட்ட விருந்தில் கலந்து கொண்டார்களே!"

**"நீங்கள் படித்த கல்லூரிக்கு விஸிட் செய்திருப்பீர்களே?"**

"அங்கே போகாமலா? கூடவே ஸ்டார் டீ.வி. டீமும் வந்திருந்ததே!"

**"நீங்கள் படித்த காலத்துக்கும், இப்போதைக்கும் ஏதேனும் மாற்றம் தெரிந்ததா?"**

"அன்று போலவே இன்னும், பழம் பெருமை மாறாமல், தரம் தாழாமல் இருக்

# பாகிஸ்தான்

கிறது. நான் குரு தாஸ்பூரில் பிறந்து வளர்ந்தாலும், ஆங்கில இலக்கியம் படித்தது லாகூரிலுள்ள அரசுக் கல்லூரியில். இது பிரிட்டிஷாரால், ஆக்ஸ்ஃபோர்ட், கேம்ப்ரிட்ஜ் அடிப்படையில் நிறுவப்பட்டது. எங்கள் பிரின்சிபால், ஏனைய விரிவுரையாளர்கள், ஹாஸ்டல் வாழ்க்கை, ஹாக்கி, டென்னிஸ் விளையாடிய காலம்... எல்லாமே நினைவில் மலர்ந்தன. கல்லூரியில் என்னைக் கண்டதும் எல்லோருக்கும் பேரானந்தம்." (தேவா னந்தம்?)

**"அப்புறம் வேறெங்கெல்லாம் சென்றீர்கள்? நினைவில் நிற்கும்படியாக ஏதேனும் நிகழ்ந்ததா?"**

"அவர்கள் எங்கெல்லாம் நிகழ்ச்சி ஏற்பாடு செய்திருந்தார்களோ அங்கெல்லாம் சென்றோம்; விருந்து வயிற்றுக்கு மட்டுமல்ல, செவிக்கும் நிறையவே கிடைத்தது. வாஜ்பேயி, 'எக்ஸ்டெம்போரா'க, ஆத்மார்த்

தமாகப் பேசினார்; கவிதைகளை அழகாக இடைச் செருகினார். அவர்கள் தரப்பு விருந்தினர்கள் எல்லோருமே செயற்கைத் தனமில்லாத இயல்பான நட்புணர்ச்சியுடனே பழகினார்கள். என் பழைய நண்பர்கள், சொந்தக்காரர்கள், தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டனர். இளம் தலைமுறையினரிடமிருந்தும் என் படங்களைப் பற்றிய பாராட்டுகள், விமர்சனங்கள் குவிந்தன. ஒரு புல்லாங்குழல் ஆர்டிஸ்ட், என் திரைப்பாடல்களை எல்லாம் ஃப்ளூட்டில் இசைத்துக் காட்டியது, மனத்தைத் தொட்டது. புகழ்பெற்ற அனார்கலி பஜாருக்கும் சென்றேன். நோ... நோ... அப்படிப் பார்க்காதீர்கள். அனார்கலிகள் யாரையும் சந்திக்கவில்லை...''

**''பத்திரிகைகள், சுஷ்மா ஸ்வராஜை அங்குள்ளவர்களின் 'ஹாட் ஃபேவரிட்'டாக சித்திரித்தனவே?''**

''அவர் நம் செய்தித் தொடர்பு துறையின் விருப்பவர்; அதனால் அவரை நாம் 'ப்ரொஜக்ட்' பண்ணுவதும், அவர்கள் பக்கத்து முக்கியஸ்தரை அவர்கள் வெளிச்சமிடுவதும் இயல்புதானே?''

**''பால் தாக்கரேவைப் பற்றி நிறைய பாகிஸ்தானியர் விசாரித்தனர் என்பது உண்மையா?''**

''அப்படித் தெரியவில்லை. என்னிடம் யாரும் அவரைப் பற்றிக் கேட்கவில்லை என்பது உண்மை!''

**''அன்றே நிகழ்ந்த ஜம்மு படுகொலைகள் பற்றிய செய்தி, இந்திய டெலிகேஷனின் 'மூட்'டைக் கெடுக்கவில்லையா?''**

''உண்மையில், காஷ்மீர் கண்ணீரில் குளிக்கும்போது, லாகூர் டிக்ளரேஷன் தேவையா என்றுகூட அப்புறமாகச் சிலர் கமெண்டடித்திருக்கிறார்கள். ஆனால் அந்தச் சமயம், எங்களுக்கு அது பற்றிய விவரம் எட்டவில்லை.''

**'' 'பாக்'கிலேயே எதிர்த் தரப்பு ஜமாயத் இஸ்லாம்காரர்கள் கடையடைப்பு, கறுப்புக் கொடி, எதிர்ப்பு கோஷம் என்றெல்லாம் ஆர்பாட்டம் பண்ணியது...''**

''அதுவும் எங்களிடமிருந்து சாமர்த்தியமாகவும், புத்திசாலித்தனமாகவும் மறைக்கப்பட்டது. பேனசிர் பூட்டோவைக் கூடப் பார்க்க முடியவில்லை. சுருங்கச் சொன்னால், நாங்கள் அழைத்துச் செல்லப்பட்ட பாதையில் மலர்களே நிறைந்திருந்தன; முட்கள் அப்புறப்படுத்தப்பட்டிருந்தன.''

**''பி.ஜே.பியின் 'ஆண்ட்டி-மைனாரிட்டி' இமேஜைத் துடைத்தெறிய இது ஒரு 'ஸ்டண்ட்' என்று நினைக்கிறீர்களா?''**

''ஸ்டண்டோ இல்லையோ; நோக்கம் உன்னதமானது! எத்தனை நாட்களுக்குத்தான் அடுத்த வீட்டுக்காரர்களுடன் தகராறு செய்து கொண்டிருப்பது? அக்கம் பக்கத்தில் சுமுகமான உறவுகள் இருந்தால்தானே நாம் நிம்மதியாக இருக்க முடியும்? இது பாராட்டப்பட வேண்டிய முயற்சிதான்.''

**''இந்த நல்லிணக்கப் பயணமெல்லாம் வெறும் 'ஹைப்' என்று அரசியல் விமர்சகர்கள் கூறுகிறார்களே? இந்தப் பயணத்தால் ஏதேனும் நன்மை விளைந்திருப்பதாகவோ, பாகிஸ்தானியரைப் பற்றிய உங்கள் கணிப்பு மாறியிருப்பதாகவோ நினைக்கிறீர்களா?''**

''சொல்பவர்கள், வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ என்பவர்கள்தாம்! என்னைப் பொறுத்தவரை, இந்தப் பயணம், நிச்சயமாக, நம் இரு நாட்டினரிடையே

---



''கிளார்க் எங்கேப்பா?''

''காபி சாப்பிட கேண்டீன் போயிருக்காரு சார்!''

''சரி! ஹெட் கிளார்க்கைக் கூப்பிடு!''

''தலைவலின்னு மாத்திரை போட்டுக்கிட்டு அசந்து தூங்குறாரு சார்!''

''அஸிஸ்டென்ட் மானேஜரையாவது வரச் சொல்லு!''

''அவரு பர்மிஷன்லே போயிட்டாருங்க சார்!''

''மானேஜர் கூடவா இல்லே.. கூப்பிடய்யா!''

''சசி சார்! அவரு டைப்பிஸ்ட்டோட கம்பெனி விஷயமா வெளியே போயிட்டாரு!''

''இந்த ஆபீஸைக் கடவுளாலும் திருத்த முடியாது. நீ போயி ஒரு தலையணை கொண்டா!''

— சீத்தாதம்பி

இறுகிக் கிடந்த பனிப்பாறைகளை ஓரளவாவது உருக்கியிருக்கிறது என்பதே நிஜம். அந்த நாட்டையும், அந்த மக்களையும் பார்த்தபோது... ஐயோ! இவர்கள் நம்மைப் போலவே அல்லவா இருக்கிறார்கள்? முக ஒற்றுமையிலிருந்து கலாசார ஒற்றுமைவரை எத்துணை ஒன்றியிருக்கிறோம்? இவர்களுடனா நமக்குச் சண்டை என்று நினைக்காமலிருக்க முடியவில்லை; அங்கேயுள்ள சாதாரணக் குடிமக்களும், நட்புக்கரம் நீட்டவே விழைகிறார்கள். அவர்கள் பேச்சிலும், முகபாவத்திலும் அது பிரதிபலித்தது.''

**''காஷ்மீர் பிரச்னையை ஊதித் தள்ளி விடலாம் என நினைக்கிறீர்களா?''**

''காஷ்மீர் பிரச்னை ஒரு வலுவான நிஜம். ஆனால் அந்த ஒரு விஷயம் நம்மிடையே இத்தனை துவேஷத்தை வளர்க்க வேண்டுமா? வேற்றுமைகள் நம்மிடையே இல்லையா? நம் நாட்டிலேயே, ஒரு மாநிலத்திலிருந்து மற்றதற்குச் சென்றால், ஐரோப்பாவுக்கோ ஆப்ரிக்காவுக்கோ வந்தது போலிருக்கிறது. மொழியே புரியவில்லை; பழக்க வழக்கங்களும் வித்தியாசமாயிருக்கின்றன. நம் மாநிலத்துக்குள்ளேயே 'தனி விதர்பா' என்ற வேற்றுமைக் குரல் ஒலிக்க வில்லையா? இருந்தும்கூட நம்மால், நட்புணர்ச்சியுடன் ஒற்றுமையாக இருக்க முடிகிறதே?''

**''தீர்வு காணும் பொறுப்பு உங்கள் வசமிருந்தால், என்ன செய்வீர்கள்?''**

''அதிகாரம் என் கையிலிருந்தால், முதலில், நம் நாட்டின் அடிப்படை வேற்றுமைகளுக்கான மொழிப் பிரச்னையை தீர்த்துக் கட்டுவேன். மும்மொழித் திட்டத்தை-ஆங்கிலம், இந்தி, மாநில மொழி- அமல்படுத்துவேன். காஷ்மீர் பிரச்னைக்கு ஆணிவேரான விஷயங்களை அலசி ஆராய்ந்து அறிவு பூர்வமாக முடிவெடுத்தால், நிச்சயம் தீர்வு கிடைக்கும். அணுகுமுறைதான் தீர்வுகளின் அஸ்திவாரம்.''

**''உங்கள் அடுத்தபடம், பாகிஸ்தானிய ப்ராஜக்டாக இருக்குமா?''**

''தற்சமயம் 'சென்சார்' என்றொரு படம் செய்கிறேன்; சென்சார் போர்டைப் பற்றி, இதுவரை தொடப்படாத புதிய கோணங்களை அலசுகிறேன். ஜாக்கி ஷ்ராஃப், ஓம்புரி, ஹேமமாலினி, ஆயிஷா ஜீல்கா என்று ஒரு நட்சத்திரப் பட்டாளமே இருக்கிறது. நம் இரு நாடுகளுக்கும் உறவுகள் மேம்பட்டால், அடுத்து, பாகிஸ்தானியப் படம் தான்!''

**''பாகிஸ்தானிலிருந்து என்ன கொண்டு வந்தீர்கள்?''**

''ஷாப்பிங் எதுவும் செய்யவில்லை; பாகிஸ்தானிய மக்களின் இதயங்கனிந்த நட்புணர்ச்சி, மனம் நிறைந்த நினைவுகள்... இவற்றை மட்டுமே சுமந்து வந்தேன்.''

பேட்டி: **ஜெயஸ்ரீ ராஜ்**



• கட்டடம்

• அடிக்கல் நாட்டு விழாவில்...

## உதாரணத்துக்கு ஓர் அரசுப் பள்ளி!

**சுமார் நாற்பது லட்ச ரூபாய்ச் செலவில், லால்குடியிலுள்ள அரசு மேல்நிலைப் பள்ளிக்குக் கட்டடம் ஒன்று கட்டப்பட்டு வருகிறது. நூற்றாண்டு விழா காணப்போகும் இப்பள்ளிக்கு வயலின் மேதை லால்குடி ஜெயராமன் தலைமையில் கமிட்டி அமைந்ததுமே நன்கொடைகள் வந்து குவிய ஆரம்பித்துவிட்டதாம். கமிட்டி தொடங்கிய அன்று இப்பள்ளி ஆசிரியர்கள் தந்த நன்கொடையே ஒன்றரை லட்சம்! முழுக்க முழுக்க அரசு உதவியில்லாமல், பல்வேறு நிறுவனங்கள், முக்கிய பிரமுகர்களின் நன்கொடைகளாலேயே கட்டப்படுகிறதாம்! மற்ற ஊர்க்காரர்களும் ஏன் இப்படி முயலக்கூடாது?**

**— கிருஷ்ணா**

திருச்சியில் படித்துக்கொண்டிருந்த காலத்தில், எனக்கு வைஜெயந்தி என்கிற சக மாணவியின் நட்பு கிடைத்தது. அவள் திருமணமான பெண். அந்தத் திருமணம்கூட, அந்தக் காலச் சூழ்நிலையை வைத்துக்கொண்டு பார்த்தால், மிகவும் புரட்சிகரமானது என்றுதான் சொல்ல வேண்டும்.

ஆர். பார்த்தசாரதி என்று எங்களது குடும்ப நண்பர் ஒருவர் இருந்தார். அவர் வெகு நாட்கள் திருமணம் செய்து கொள்ளவில்லை. திருச்சியில் அகில இந்திய வானொலியில் அவருக்கு பொறுப்பான உத்தியோகம். ஆர். பார்த்தசாரதி, வைஜெயந்தியை விரும்பினார். வைஜெயந்திக்கும் பார்த்தசாரதியைப் பிடித்தது.

இரண்டு குடும்பங்களுமே ஐயங்கார் குடும்பங்கள்தான் என்றாலும், வெவ்வேறு உட்பிரிவுகளைச் சேர்ந்தவர்கள். எனவே, இருதரப்பிலும், பெற்றோர்களிடமிருந்து பலமான எதிர்ப்பு அவர்கள் திருமணத்துக்கு. ஆனால், ஒருநாள் பார்த்தசாரதி, வைஜெயந்தியை கோவிலுக்கு அழைத்துக்கொண்டு போய், தாலி கட்டிக் கல்யாணம் பண்ணிக்கொண்டு, வந்து நின்றார். பார்த்தசாரதியின் அம்மா 'எப்படி இந்தக் கல்யாணம் நடக்கப் போயிற்று?' என்று சத்தம் போட ஆரம்பித்தாள்.

புகுந்த வீட்டில், வைஜெயந்தியை நல்லபடியாக வரவேற்காத சூழ்நிலை காரணமாக, பள்ளிக்கூடப் படிப்பை முடித்திருந்த வைஜெயந்தியை கல்லூரியில் சேர்த்து விட்டார் பார்த்தசாரதி.

குடும்பத்தில் மாமியார், மாமனாரும் மற்றவர்களும் ரொம்ப நெருங்கிப் பழகாத காரணத்தால், அவள் தான் தனிமைப் படுத்தப்பட்டுவிட்டதைப் போல உணர்ந்தாள். அவளது உணர்வுகளைப் புரிந்துகொண்ட நான், அவளுக்கு ஆறுதலாக அவ்வப்போது பேசுவேன்; அடிக்கடி எங்களுடைய வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வருவேன். கல்லூரியிலும் சரி, வெளியிலும் சரி. நாங்கள் ஒருவருக்கொருவர் மிக நெருங்கிய தோழிகள் ஆனோம்.

# திருமணத்துக்கு




வைஜெயந்தியின் அண்ணா ஒருவர், பெங்களூரில் இருந்தார். வைஜெயந்தி அவருக்கு அடிக்கடி கடிதங்கள் போடுவாள். அந்தக் கடிதங்களில், தாம் தனிமையாய் இருப்பதுபோல உணர்வதையும், தமக்கு இருக்கும் ஒரே ஆறுதல் தோழி ராஜலட்சுமிதான் என்றும் கடிதம் எழுதுவாள். அப்படி என்னைப் பற்றி ஒரு தடவை வைஜெயந்தி ஒரு கடிதம் எழுதிய போது அதற்கு, வைஜெயந்தியின் பெங்களூர் அண்ணாவிடமிருந்து ஒரு பதில் வந்தது!

"பிரச்னைக்குரிய திருமணத்துக்குப் பின்,

# முன் வைத்த பரீட்சை!

உன்னுடைய மனத்துக்கு தென்பூட்டி, உனக்கு உறுதுணையாக இருந்து வரும் உன் சிநேகிதி ராஜலட்சுமியை நான் மிகவும் பாராட்டுகிறேன். உங்களுடைய நட்பு இன்னமும் ஆழமாகி வளர, என் வாழ்த்துக்கள்" என்று அவர் எழுதியிருந்தார்.

வைஜெயந்தியின் அண்ணனிடமிருந்து, என்னைப் பாராட்டி, ஒரு கடிதம் வந்தவுடன், எனக்கு ஏக குஷியாகிவிட்டது.

உடனே, நான் அவருக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டேன். "வைஜெயந்தியைப் போல ஒரு பெண், எனக்குத் தோழியாக அமைந்ததை, நான் பெரும் அதிர்ஷ்டமாகக் கருதுகிறேன். உங்களுடைய பாராட்டு, நீங்கள் உங்களுடைய கடிதத்தில் குறிப்பிட்டுள்ளதைப் போல எங்களது நட்பு மேலும் இறுகுவதற்கு டானிக் போல அமைந்து விட்டது. உங்களுடைய பாராட்டுக்களுக்கு என் நன்றி" என்று எழுதினேன்.

என் கடிதம் கிடைத்தவுடன் அவர் என் விலாசத்துக்கே பதில் போட்டார். நாளடைவில் வைஜெயந்தியின் அண்ணாவும் நானும் நேரடியாகவே கடிதப் பறிமாற்றம் செய்து கொள்ளத் தொடங்கினோம்.

அந்த சமயத்தில், பேனா நட்பு என்பது, பரவலாக இருந்த ஒரு விஷயம். பலரும், உள் நாட்டில் மட்டுமின்றி, அயல்நாடுகளில்கூட பேனா நண்பர்களைப் பெற்றிருந்தார்கள். எனவே, நானும் எனக்கு மிக நல்ல பேனா நண்பர் ஒருவர் பெங்களூரில் கிடைத்திருப்பதாக நினைத்துக்கொண்டேன்.

கடிதப் பரிமாற்றம் தொடர்ந்து கொண்டிருந்தபோது, வைஜெயந்தி வீட்டு விசேஷம் ஒன்றில் கலந்து கொள்ளுவதற்காக, நானும் அவளுடன் பெங்களூர் போனேன். அவளுடைய அண்ணனைச் சந்தித்தேன். அதுவரை கடிதங்கள் வாயிலாகவே, கருத்துக்களைப் பரிமாறிக் கொண்ட நாங்கள் இரண்டு பேரும், முதல் தடவையாக சந்தித்துக் கொண்டபோது ஒருவருக்கொருவர் முறைப்படி அறிமுகம் செய்துகொண்டோம். பெங்களூரில் தங்கியிருந்த ஒரு சில நாட்களில் சமயம் கிடைக்கிறபோதெல்லாம் நானும், வைஜெயந்தியும் அவளுடைய அண்ணனும் அரட்டை அடித்துக்கொண்டிருந்தோம்.

முதல் சந்திப்பிலேயே ஏற்கெனவே ஒருவர் மீது ஒருவர் கொண்டிருந்த நல்ல அபிப்ராயம் காரணமாக, எங்கள் இரண்டு பேருக்கும் ஒருவரையொருவர் பிடித்துப் போய் விட்டது.

வெளிப்படையாக திருமணம் பற்றிப் பேசிக் கொள்ளாவிட்டாலும், மனத்தளவில் நான் மணந்தால் அவரைத் தான் மணப்பது என்று முடிவெடுத்து விட்டேன். அவரும் தமக்கு மனைவியாக வரப் போகிறவள் இவள்தான் என்று தீர்மானித்து விட்டார்.

பெங்களூரிலிருந்து நான் திருச்சிக்கு வந்த பின்னர், மறுபடியும் கடிதப் போக்குவரத்து தொடங்கியது.

அப்போதுதான், சற்றும் நான் எதிர்பார்க்காத நிகழ்ச்சி ஒன்று நடந்தது. ஆம்! பெங்களூரிலிருந்து, வைஜெயந்தியின் அண்ணன் எனக்கு எழுதிய ஒரு கடிதம் என் அப்பாவின் கையில் சிக்கிக்கொண்டது. முதலில் எனக்கு இந்த விஷயம் தெரியாது.

என் அப்பா, என்னைக் கூப்பிட்டு, "இது என்ன? எத்தனை நாளாக இது நடந்து கொண்டிருக்கிறது?" என்று நேரடியாகவே விஷயத்துக்கு வந்தார். அவரே விஷயத்துக்கு வந்து விட்டபின் எங்கள் காதல் பற்றி, அவரிடம் மூடி மறைக்க வேண்டிய 'அவசியம் இல்லை' என்று நினைத்தேன். "எங்கள் இரண்டு பேருக்குமே ஒருவரையொருவர் பிடித்திருக்கிறது. நாங்கள் இரண்டு பேரும் திருமணம் செய்து கொள்ளுவது என்று முடிவு செய்து இருக்கிறோம்" என்றேன் ரொம்ப தைரியமாக. இந்த மாதிரி வெட்டு ஒன்று, துண்டு இரண்டு டைப் பதிலை என் அப்பா எதிர்பார்க்கவில்லை என்பதை அவருடைய முகபாவமே சொன்னது."

திருமதி ஒய்.ஜி.பி

"இந்தக் கல்யாணம் நடக்காது" என்றார் கண்டிப்பான குரலில்.

"ஏன்?" என்றேன்.

"அவர்களும், நாமும் வெவ்வேறு வைணவ உட்பிரிவு என்பது உனக்குத் தெரியாதா?" என்றார் கோபமாக.

"தெரியும். ஆனால் அது ஒரு பெரிய பிரச்னை என்று நாங்கள் கருதவில்லை! வைஜெயந்தியும், பார்த்தசாரதியும்கூடத்தான் வெவ்வேறு உட்பிரிவு. அவர்கள் திருமணத் துக்கும்தான் பிரச்னை வந்தது. ஆனாலும், இரண்டு பேரும் கல்யாணம் செய்து கொண்டு சந்தோஷமாகத்தானே இருக்கிறார்கள்?" என்று படபடவென்று ஒரு சிறு சொற்பொழிவையே அங்கே நடத்தி முடித்து விட்டேன்.

அவை எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்த என் அப்பா, "நான் சொல்வதுதான் இறுதி. நீ அந்தப் பையனை மறந்து விட வேண்டியதுதான்" என்றார்.

"அது மட்டும் நடக்காது. அவர் இல்லையெனில் திருமணமே செய்து கொள்ளாமல் இருந்து விடுவேன்" என்று அழுத்தமான குரலில் நான் சொன்ன மறுநிமிடம் அப்பா தன் பிடிவாத நிலையிலிருந்து, கொஞ்சம் இறங்கி வந்தார்.

"நீதான் காந்திஜி மீது ஏக மரியாதை வைத்திருக்கிறாயே! அவர், தமது மகன் தேவதாஸும், ராஜாஜியின் மகள் லட்சுமியும் ஒருவரையொருவர் விரும்பியபோது, போட்ட கண்டிஷன் என்ன தெரியுமா? நீங்கள் இரண்டு பேரும், ஒரு வருடம் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளக் கூடாது. கடிதங்கள்கூட எழுதிக் கொள்ளக் கூடாது. அப்படி, ஒரு வருடத்துக்குப் பின்னும் நீங்கள் ஒருவரையொருவர் விரும்பினால் திருமணம் செய்து கொள்ளுங்கள் என்பதுதான். அதன்படி ஒரு வருடம் காத்திருந்த பின்னரே, தேவதாஸ் – லட்சுமி திருமணம் நடைபெற்றது."

"எங்களையும் அதேபோல பார்க்காமல், பேசாமல், கடிதம் எழுதிக் கொள்ளாமல் இருக்கச் சொல்லுகிறீர்களா?" என்றேன்.

"ஆமாம்!" என்றார்.

நான் அவரது நிபந்தனையை ஏற்றுக் கொண்டேன். வைஜெயந்தியின் அண்ணனுக்கும் இந்த நிபந்தனை தெரிவிக்கப் பட்டது.

(இன்னும் சொல்வேன்)







1999 மார்ச் 21
வெகுதான்ய பங்குனி 7
மலர் : 57
இதழ் : 34

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## தம்பிதுரையின் தகிடுதத்தம்!

சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்கு மும்முரமாக விசாரிக்கப்படுகிற நேரத்தில் குடியரசுத் தலைவரின் உத்தரவு வருகிறது. 'நீதிபதி சிவப்பா இந்த வினாடி முதல் ஓய்வுபெற்ற நீதிபதியாகிறார்!' என்று கூறும் அந்த உத்தரவை சாக்ஷாத் சட்டத்துறை அமைச்சர் தம்பிதுரையே அனுப்பியிருக்கிறார்! விரைவில் நீதிபதி சிவப்பா தீர்ப்புக் கூறவிருந்த ஒரு வழக்கோ அமைச்சர் தம்பிதுரையின் கரூர் தொகுதியில் சட்டவிரோதமாக குவாரியிங் செய்யப்பட்டது தொடர்பான வழக்கு! இதன் மூலம் அரசுக்குப் பல கோடி நஷ்டம் என்பதாகத் தொடரப்பட்ட வழக்கு. ஜெயலலிதா மீதான சில வழக்குகளிலும் சிவப்பா 'ஜெ'க்கு எதிரான தீர்ப்புகளை அச்சமின்றி வழங்கியுள்ளார். எனவேதான் இந்தப் பதவி நீக்கம் உள்நோக்கத்துடன் செய்யப்பட்டதாகிறது.

கர்நாடகாவைச் சேர்ந்த ஒருவர், நீதிபதி சிவப்பாவின் வயது குறித்துப் பிரச்னை எழுப்பியிருந்தார். அதை விசாரித்த உயர்நீதிமன்றம், புகாரைத் தள்ளுபடி செய்துவிட்டது. இந்த விஷயத்தில் முடிவெடுக்க வேண்டியது உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதியும் குடியரசுத் தலைவரும்தான் என்று கூறி விட்டது.

சிவப்பா, இதுகுறித்து ஏற்கெனவே ஒரு தன்னிலை விளக்கத்தைக் குடியரசுத் தலைவருக்கு அனுப்பியிருக்கிறார். இத்தனை காலம் அதன் மீது எந்த நடவடிக்கையும் எடுக்காமல், திடுதிப்பென்று இப்போது அவசரம் அவசரமாக அமைச்சர் செயல்பட்டிருப்பதானது, இதில் அரசியல் நோக்கம் நிறையவே இருப்பதை உறுதி செய்கிறது.

இச் சம்பவத்தைத் தொடர்ந்து, அ.தி.மு.க வழக்குரைஞர்கள் 'சிவப்பாவைக் கைது செய்ய




வேண்டும்' என்று கோரியது சட்டத்துறை அமைச்சரின் அரசியல் உள்நோக்கத்தை மேலும் வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது.

பிறப்புச் சான்றிதழில் தவறு நேர்வதும் பிறகு அதைத் திருத்திவிட முயற்சி செய்வதும் எத்தனையோ பேருக்கு சகஜமாக நேரக்கூடியதுதான். சிவப்பாவுக்கும் நேர்ந்துள்ளது. இதில் முக்கியமான விஷயம், ஓய்வுபெற வேண்டிய காலத்துக்குப் பிறகும் பதவியில் நீடிக்க வேண்டும் என்ற உள்நோக்கத்துடன் பிறந்த தேதி திருத்தப்பட்டதா அல்லது தவறைச் சரிசெய்ய வேண்டும் என்ற ஒரே நோக்கத்தில் திருத்தப்பட்டதா என்பதுதான்.

தாம் அரசுப் பணியை ஏற்க முடிவு செய்வதற்குப் பல காலம் முன்னதாகவே இந்தப் பிறந்த தேதி திருத்தத்துக்கான முயற்சிகளை மேற்கொண்டு செய்து முடித்து விட்டதாகக் கூறுகிறார் சிவப்பா.

குடியரசுத் தலைவர் அவரையே நேரில் அழைத்துப் பேசியிருக்கலாம். அப்படியும் சந்தேகம் தீராதிருந்திருப்பின் அவரது ராஜினாமாவைக் கோரியிருக்கலாம். உயர்நீதிமன்ற நீதிபதியை இப்படி அவமானப்படுத்த, தெரிந்தோ - தெரியாமலோ குடியரசுத் தலைவர் உடந்தையாக இருக்கும்படியாகி விட்டது.

இது சிவப்பாவுக்கு நேர்ந்த அவமானம் மட்டுமல்ல... நீதித் துறையை இன்றைய ஆட்சியில் இருப்பவர்கள் எவ்வளவு துச்சமாக மதிக்கிறார்கள் என்பதற்குச் சான்று.

## லாலுவுக்கு மறுவாழ்வு!

பீஹாரில் ராப்ரி - லாலு அராஜகம் தொடர வாய்ப்பு ஏற்படுத்தித் தந்து புண்ணியம் கட்டிக் கொண்டிருக்கிறார் சோனியா காந்தி!

ரண்வீர் சேனை தாக்குதலைத் தொடர்ந்து பீஹார் அரசுக்குப் பதவியில் நீடிக்கத் தார்மிக உரிமை இல்லை என்று ஆரம்பத்தில் சொன்னவர், படிப்படியாகப் பின்வாங்கி, அம் மாநிலத்தில்




356-ஐ பிரயோகித்து குடியரசுத் தலைவர் ஆட்சி நிறுவ தமது கட்சி ஆதரவு தராது என்று பட்டவர்த்தனமாகப் பிரகடனம் செய்தது மிகப் பெரிய மோசடி!

நாட்டின் பிரதமர், தமது கௌரவத்தையெல்லாம் கழற்றி வைத்துவிட்டு, காங்கிரஸ் தலைவரிடம் போய் பீஹார் மசோதாவை மாநிலங்கள் அவையில் ஆதரிக்கும்படி வருந்திக் கேட்டுக் கொள்ள வேண்டியிருந்திருக்கிறது. அவ்வாறு அவர் செய்த பிறகும் சோனியா சம்மதிக்கவில்லை!

காங்கிரஸ் தலைவியின் பீஹார் தொடர்பான, வெளிப்படையான ஆரம்ப அறிக்கைகளை மட்டுமே நம்பி மத்திய அரசு செயல்பட்டிருக்க முடியாது. அந்தக் கட்சியினருடன் பேச்சு வார்த்தை, ஆலோசனைகள் நிகழ்த்தாமல் பீஹாரில் 356 வது பிரிவை அரசு பிரயோகித்திருக்க முடியாது.

வாக்களித்தபடி ஆதரவு தராமல் காங்கிரஸ் கடைசி நேரத்தில் மனம் மாறி முதுகில் குத்தி விட்டது என்றே முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது.

இவ்வாறு காங்கிரஸ் நடந்து கொண்டவிதத்தில் லாலுவுக்குப் புதிய முக்கியத்துவம் ஏற்பட்டிருக்கிறது. அவர் காங்கிரஸுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் எதிர்காலத்தில் புதிய வியூகம் வகுக்கலாம்; அல்லது மூன்றாவது அணி உருவாக்குவதில் தமது செல்வாக்கைப் பயன்படுத்தலாம். எவ்வாறாயினும் ஊழல் குற்றச்சாட்டுகளுக்கு உள்ளாகி, சிறைவாசமும் செய்துவிட்டு ஜாமீனில் வெளியே வந்து உலவும் ஒருவருக்கு, இவ்வளவு முக்கியத்துவமும் செல்வாக்கும் வளரும் அளவுக்கு சோனியா நடந்து கொண்டிருப்பது மன்னிக்க முடியாதது. பா.ஜ.கவை மட்டம் தட்டுவதாக நினைத்துக் கொண்டு ஓர் ஊழல் பூதத்தைக் கட்டவிழ்த்து விட்டிருக்கிறார்.

தாம் மீண்டும் முதல்வராகியிருப்பது பெண்கள் தினத்தில் பெண் குலத்துக்குக் கிடைத்த வெற்றி என்று சொல்லியிருக்கிறார் ராப்ரி தேவி. இதைவிட பெரிய ஜோக் இருக்க முடியாது! லாலுவின் பினாமியாகச் செயல்படும் ராப்ரி, ராஜீவ் காந்தியின் புகழில் குளிர்காய்கிற சோனியாவின் தயவால் நாற்காலியை மீட்டுக் கொண்டிருப்பது, பெண்களுக்கு எந்த வகையில் பெருமை சேர்க்க முடியும்!



தில்லி தமிழ்ச் சங்கம் நடத்தும்

# அமரர் கல்கி நூற்றாண்டு விழா

**19, 20, 21 மார்ச், 1999**

**தொடக்க விழா:**

**19.3.1999 வெள்ளி மாலை 6.00 மணி**

தலைமை: திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்கள்
(முன்னாள் குடியரசுத் தலைவர்)

வாழ்த்துரை: திரு. சி.பி. திருநாவுக்கரசு அவர்கள்
(நாடாளுமன்ற மாநிலங்களவை உறுப்பினர்)

**தமிழிசை:**
திருமதி. சுதா ரகுநாதன் குழுவினர்

**20.3.1999 சனிக்கிழமை காலை 10.30 மணி**

**கருத்தரங்கம்:**

*'அமரர் கல்கியின் படைப்புலகம்'*

துவக்க உரை: திரு. எஸ். சத்தியமூர்த்தி

தலைமை: பேராசிரியர் இரா. மோகன்

| | |
|---|---|
| சிவகாமியின் சபதம்-நாகநந்தி | : புலவர் வை. சங்கரலிங்கம் |
| சிவகாமியின் சபதம் - பரஞ்சோதி | : புலவர் ரா. விசுவநாதன் |
| பொன்னியின் செல்வன் - நந்தினி | : டாக்டர் நிர்மலா மோகன் |
| பார்த்திபன் கனவு - நரசிம்மவர்மர் | : டாக்டர் இரா. வேல்முருகன் |
| அலை ஓசை - சூரியா | : கவிஞர் கே.ஜி. இராஜேந்திர பாபு |
| தியாகபூமி - சாவித்திரி | : பேராசிரியர் ஹரி இராமநாதன் |
| கள்வனின் காதலி - முத்தையன் | : டாக்டர் வீ. காந்திமதி |
| மகுடபதி-மகுடபதி | : ஆனந்தம் கிருஷ்ணமூர்த்தி |

**பிற்பகல் 2.00 மணி**

*'கல்கி–அவர் காலமும் வாழ்வும்'*

தலைமை: முனைவர் செ. ரவீந்திரன்

| | |
|---|---|
| கல்கியின் சமகால எழுத்தாளர்கள் | : திரு. கே. பென்னேஸ்வரன் |
| கல்கி தமிழிசைக்கு ஆற்றிய பணி | : திரு. கே. மகாதேவன் |
| கல்கியும் பத்திரிகைத் துறையும் | : ஏ.ஆர். ராஜாமணி |
| கல்கியின் நாட்டுப் பற்று | : முனைவர் இந்திராணி மணியன் |
| கல்கியும் ஸ்ரீமான் பொதுஜனமும் | : முனைவர் கோவி. இராசகோபால் |
| கல்கி-சில புதிய தகவல்கள் | : 'கடுகு' பி.எஸ். ரங்கநாதன் |
| கல்கிக்குப் பின் கல்கி | : நாக. வேணுகோபாலன் |

மாலை 5.30 மணி

## பரத நாட்டியம்:

குமாரி சித்ரா (பெங்களூர்)

**21.3.1999 ஞாயிற்றுக்கிழமை முற்பகல் 12.00 மணி**

## சொல்லாடல்:

*அமரர் கல்கியின் புகழுக்குப் பெரிதும் காரணமாக அமைவது அவரது படைப்புப் பணியா? பத்திரிகைப் பணியா? பொதுநலப் பணியா? நாட்டுப் பணியா?*

தலைமை: பேராசிரியர் இரா. மோகன்

**சிறப்பு அழைப்பாளர்கள்:**

பேராசிரியர் ஹரி இராமநாதன்
டாக்டர் இரா. வேல்முருகன்
புலவர் வை. சங்கரலிங்கம்
முனைவர் மாரியப்பன்
முனைவர் சீனிவாசன்
திரு நாகஜோதி
திரு கணபதி
திரு சுப்புடு
கவிஞர் கே. ஜி. இராஜேந்திரபாபு
முனைவர் விவேகானந்தன்
திரு எம். சேதுராமலிங்கம்
டாக்டர் நிர்மலா மோகன்
திருமதி ரமாமணி சுந்தர்
டாக்டர் வீ. காந்திமதி
திருமதி மீரா
மற்றும்... நீங்கள்

பிற்பகல் 2.00 மணி

திரைப்படம்

## *தியாகபூமி*

மாலை 5.00 மணி

## பட்டிமன்றம்:

சிறப்பு விருந்தினர்: திரு. என். விட்டல் அவர்கள்
(மைய கண்காணிப்பு ஆணையர்)

நடுவர்: பேராசிரியர் இரா. மோகன் அவர்கள்

## *அமரர் கல்கியின் படைப்புகளில் விஞ்சி நிற்பது*

### *நகைச்சுவை உணர்வே!*

புலவர் வை. சங்கரலிங்கம்
டாக்டர் வீ. காந்திமதி
டாக்டர் இரா. வேல்முருகன்

### *வரலாற்று உணர்வே!*

டாக்டர் நிர்மலா மோகன்
கவிஞர் கே.ஜி. இராஜேந்திரபாபு
பேராசிரியர் ஹரி இராமநாதன்

அனைவரும் வருக என அன்புடன் அழைக்கிறோம்

வெ. ராஜாராமன்
தலைவர்

எம்.என்.எஸ். மணியன்
பொதுச் செயலர்

“உன் வயித்துக்குள்ளே ஒரு தம்பிப் பாப்பா இருக்கா அம்மா...? பாட்டி சொன்னாங்களே...?

– இரண்டாவது குழந்தையின் வருகைக்கு முன் ஒவ்வொரு வீட்டிலும் ஒலிக்கக்கூடிய கேள்வி!

“பாப்பா எப்ப வெளிய வரும்...? எப்படி உள்ளே போச்சு...?” என்றெல்லாம் சற்றே பயம் கலந்த கவலையுடன் கேள்விகள் தொடரும்.

கேட்கப்படும் முன்னரே இக் கேள்விகளுக்குப் ‘பதில்’ சொல்லி இரண்டாவது பாப்பாவின் வருகைக்குத் தயார் செய்வது, முதல் குழந்தைக்குப் பாதுகாப்புணர்வைத் தரும்; ஒரு முக்கிய நிகழ்வில் பங்கேற்கும் மகிழ்ச்சியையும் ஏற்படுத்தும்.

கர்ப்பம் ஊர்ஜிதமாகி குடும்பத்தாருக்குத் தெரிவிக்கப்படுகிறபோது, செய்தியை அறியும் முதல் சிலருள் மூத்த குழந்தையும் கட்டாயம் இடம் பெற வேண்டும்.

“அம்மாவுக்குள்ளே உன்னை மாதிரி இன்னொரு பாப்பா வளர்ந்துக்கிட்டிருக்கு. இன்னும் ஒன்பது மாசம் கழிச்சு, உனக்கு சம்மர் ஹாலிடேஸ் வர்றபோது பாப்பா பிறக்கும்.”

“எப்படிப் பிறக்கும்...?”

“ஆஸ்பத்திரிக்குப் போனா அங்க டாக்டர் நர்ஸெல்லாம் ஹெல்ப் பண்ணி பாப்பாவைப் பிறக்க வைப்பாங்க. அப்புறம் நம்ம வீட்டுக்குப் பாப்பாவைக் கொண்டு வருவோம். அப்போ அதைப் பார்த்துக்க நீயும் ஹெல்ப் பண்ணணும்... சரியா...

“ஏன்...?”

“பாப்பா ரொம்ப சின்னதாயிருக்கும். அது உன்னை மாதிரி பெரிசாகற வரைக்கும் எல்லாரும் அதை பத்திரமா பார்த்துக்கணும். மடியில் போட்டு நீ தூங்க வைக்கலாம். கொஞ்சம் பெரிசானா விளையாட்டு காமிக்கலாம்...”

“இரிஷோட தம்பி பாப்பா மாதிரியா...?”

“ஆமாம்...”

“ஆனால் எனக்கு தங்கைப் பாப்பா தானே வேணும்...”

“நம்ப பாப்பா தம்பியாவும் இருக்கலாம். தங்கையாவும் இருக்கலாம். பிறக்கறப்போ தான் தெரியும்...”

இத்தகைய உரையாடல் மூத்த குழந்தையை ஓரளவு தயார்ப்படுத்தி வைத்தாலும் இரண்டாவது குழந்தையின் வருகை என்பது முதல் குழந்தையின் வாழ்க்கையில் ஏற்படும் புதிய ஆக்கிரமிப்புத் தான்!

அது நிகழும்போது, மூத்தவன் இன்னமும் குழந்தைதான் என்பதைப் பெரும்பாலான பெற்றோர்கள் மறந்து விடுவதும் சகஜம். அதே சமயத்தில் கவனமும் நேரமும் புதுக் குழந்தையை நோக்கி திசை திரும்ப, மூத்தவனின் பாதுகாப்புணர்வு சோதனைக்குள்ளாகிறது. தனக்கு அரவணைப்பு குறைந்துவிட்டது என்ற எண்ணம் குழந்தையைப் பிரிக்கிறது.

போதாக்குறைக்கு “பாப்பா தூங்குது கத்தாதே!” “இப்படியா அழுக்குக் கையோட பாப்பாவைத் தொடறது!” என்று கண்டனங்கள் வேறு!

சுற்றாமா்

# புதுப் பாப்பாவைப் பிடிக்கலே!

புதுக்குழந்தை மீது செலுத்தும் கவனம்...

எல்லாமாகச் சேர்ந்து மூத்த குழந்தையை பாதிக்க, குட்டிப் பாப்பாவின் மீது பொறாமை, கோபம் என்று அவன் உணர்வுகள் வெளிப்படுகின்றன...

‘குட்டிப் பாப்பாவிடம் நீ இதை இதைச் செய்யக்கூடாது’ என்று ‘நெகடிவ்’வாக விதிப்பதைவிட பாப்பாவை எப்படி கவனித்துக் கொள்வது என்று ஆக்கபூர்வமாகச் சொல்லி, மூத்த குழந்தையின் ஆரோக்கியமான பங்கேற்பைப் பெறலாம்.

வாண்டு சைகாலஜி!



"எனக்கு இந்தப் பாப்பாதான் பிடிக்குது..."

அதன்மூலம் அண்ணனோ, அக்காவோ அடையக்கூடிய பெருமிதம் இணையற்றது.

"சுத்தமா கை - கால் அலம்பிக்கிட்டு வா... பாப்பாவை உன் மடியிலே ஒரு நிமிஷம் படுக்க வைக்கறேன். அதுக்கு ஆசையாயிருக்குமில்லே அண்ணன் மடியில படுத்துக்கணும்னு...?"

"எதிர்வீட்டு மாமா வந்திருக்காங்க பாரு... நீ அழைச்சுட்டுப் போய் தம்பிப் பாப்பாவைக் காட்டு... பாப்பா தூங்குது; மெள்ள, சத்தம் போடாம பாத்துட்டு வந்துடலாம்னு சொல்லி அழைச்சுட்டுப் போறியா...?"

'இப்படி நீ செய்கிறாயா?' 'அப்படி நீ பார்த்துக் கொள்கிறாயா...?' 'நீ கவனித்துக் கொள்வாயல்லவா...?' என்று பொறுப்பையும் பங்கேற்பையும் கேட்டு கேட்டுப் பெறும் தொனியில் பேசுதல், do's and don'ts பட்டியல் போடுவதைக் காட்டிலும் உகந்தது.

மூத்தவன் ஒரு 'மினி அடல்ட்' போல நடந்துகொள்வதால் அவனை நாமும் முழுக்க முழுக்க பெரியவனாக நடத்திவிடக் கூடாது. என்னதான் வேலையிருந்தாலும் தினமும் சிறிதளவு நேரமாவது அவனுடன் முழுமையாகச் செலவிட்டாக வேண்டும். அரை மணி நேரமானாலும் சரி... அந்த அரை மணி நேரத்தில், இரண்டாவது குழந்தைக்கோ வேறு விஷயங்களுக்கோ இடம் தராத பூரணமான அன்னியோன்யத்தை மூத்தவனுக்கு வழங்க வேண்டும். மடியில் அமர்த்தியும் உச்சி முகர்ந்தும், கொஞ்சியும் உடல் ரீதியாக பாதுகாப்புணர்வைப் பரிமாறுவதும் முக்கியமாகிறது.

தாய் - சேய் உறவைப் போலவே தந்தை குழந்தைகளுடன் கொள்கிற உறவும் இக்கால கட்டத்தில் கவனத்துடன் திட்டமிட்டுத் தீர்மானித்து வழங்கப்பட வேண்டும். அம்மாவின் பேறு காலத்தின் போது மூத்த குழந்தைக்கு ஆதரவும் அரவணைப்பும் தந்து தாங்கக் கூடியவர் அதன் அப்பாதான்.

சாதாரணமாக, முதல் குழந்தை பள்ளி செல்ல ஆரம்பிக்கும் ஆண்டில் இரண்டாவது பிள்ளைப் பேறு நிகழுமாறு திட்டமிடுவது வழக்கம். புதுப் பாப்பாவை கவனிப்பதற்காக நம்மை பள்ளிக்கு அனுப்பி விடுகிறார்கள் என்கிற தீர்மானத்தை இது மூத்த குழந்தையின் மனத்தில் விதைக்கக் கூடும். இதனால் அழுகையும் பிடிவாதமும் அதிகமாகக் கூடும். எனவே மூத்தவன் பள்ளி செல்ல ஆரம்பித்து ஓராண்டு சென்ற பிறகு இரண்டாவது பிள்ளைப்பேறு அமையும்படி திட்டமிடலாம்.

என்னதான் திட்டமிட்டாலும் அவ்வப்போது 'எனக்கு குட்டிப் பாப்பாவைப் பிடிக்கல்லே' 'நான் பார்த்துக்க மாட்டேன்' என்பது போன்ற கோப வாக்கியங்கள் அவ்வப்போது வெளிப்படும்... 'எனக்குக் கூட தினம் தினம் பார்த்துக்க போரடிக்குது. தெரியுமா...' என்று தப்பித் தவறி அலுத்துக் கொண்டு விடாதீர்கள்.

(அடுத்த வாரம் வரை...)

● விஜி

மாதுரி

குக்கர் கூவி துயிலெழுப்பும் காலை வேளை. நகர்வலம் தொடங்கின குப்பை லாரிகள். அரைகுறையாகத் தொட்டியிலிருந்து அள்ளிப் போட்ட குப்பையை ஏந்திக் கொண்டு சதாப்தி வேகத்தில் அவை விரையும் அழகே அழகு!

அதைவிட அழகு, 'போடுவோமே குப்பை போடுவோமே' என்று சர்வ சுதந்தரத்துடன் குப்பை, வண்டியிலிருந்து பறந்து சாலையெங்கும் 'ரெட் கார்ப்பெட்' விரிக்கும் காட்சி!

இந்த அழகையெல்லாம் ரசிக்கத் தெரியாத நிர்மூடர்கள் சிலர், குப்பை அகற்றும் பணியைத் தனியாரிடம் கொடுங்கள் என்று குப்பையாக ஓர் ஐடியா கொடுத்துத் தொலைத்தனர்.

கார்ப்பரேஷன் கவுன்சில் கூட்டத்தில் இந்தக் குப்பை யோசனை விவாதிக்கப்பட்ட போதுதான் வந்தது வினை!

"குப்பையில்தான் மாணிக்கம் இருக்கிறது. ஆகவே கண்டிப்பாக அதை தனியார்வசம் ஒப்படைக்கக் கூடாது" என்று தம் நீண்ட வாதத்தை முடித்தார் கவுன்சிலர் கா. க. மணி.

"திரு. காகமணி..."

"மேயர் அவர்கள் மன்னிக்கவும். நான் காகமணியுமில்லை பாசிமணியுமில்லை. வெறும் மணி."

"சரி, மணி அவர்களே, நான் சொல்ல வந்தது குப்பையில் மாணிக்கமில்லை, மின்சாரமிருக்கிறது. நகரத்துக் குப்பையை தரம் பிரித்து, சேகரித்து குப்பை மின் நிலையத்தில் எரித்து மின்சாரமாக்கலாம்."

"வெறும் குப்பையாக இருக்கும்போது, அதை நாமே பராமரித்து, கட்டிக் காத்து வந்தோம். இப்போது மின்சாரமாக்கலாம் என்றதும் தனியார் நிறுவனத்திடம் ஒப்படைப்பது என்ன புத்திசாலித்தனம்?" – மடக்கினார் மணி.

"குப்பையையே நகரமாக வைத்திருப்பதை விட புத்திசாலித்தனமென்றே தோன்றுகிறது. நகரத்தில் சுமார் ஆயிரம் டன் குப்பை உற்பத்தியாகிறது. மேலும் பெருகிக் கொண்டே போகிறது. இது நாற்பது மெகாவாட் மின் நிலையத்துக்குப் போதுமான எரிபொருள்..."

"என்னண்ணே இது? நம்ம வூட்டு பல்பே நாப்பது வாட்டு. மேயர் போயும் போயும் நாப்பது வாட் மின்நிலையங்கறாரு?" குட்டி கவுன்சிலர்கள் சிலர் கிசுகிசுத்தார்கள்.

"தலைவா, அது வாட்டில்ல, மெகாவாட்! ரொம்பப் பெரிசு..."

"அதானே பாத்தேன்! தெருவெளக்குக் காச்சும் காண வேணாம்..."

மேயர் முறைக்க பேச்சு மூச்சடைத்தது.

"...... குப்பை அகற்ற இப்போது மாதம் ரூபாய் 25 கோடியாகிறது. தனியாரிடம் கொடுத்தால் 15 கோடிதான். கார்ப்பரேஷனுக்கு 10 கோடி செலவு மிச்சம்..."

"மேயர் அவர்களே! குப்பை கூளத்தைத் தின்று பல கோடி ஜீவராசிகள் உயிர் வாழ்கின்றன. அதை எரித்து விட்டால் இதையே நம்பியிருக்கும் மாடு,ஆடு, கழுதை, பன்றி, கோழி, எலி – இவற்றின் கதியென்ன? கால் நடைகளால் வாதாட முடியாது என்பதற்காகப் பட்டினி போட்டுக் கொல்லுவதா? இல்லை அவற்றுக்குத் தனியாக ஏதாவது சத்துணவுத் திட்டம் ஏதும் கார்ப்பரேஷன் வைத்திருக்கிறதா?" என்று ஜீவகாருண்ய சங்கத் தலைவரான ஒரு கவுன்சிலர் சூடான பிரச்னை எழுப்பினார்.

"போகி அன்று பழங்குப்பையை எரிப்போம். தமிழர் பண்பாடு. தினமும் குப்பையை எரிப்பதா? தினந்தோறும் போகியா? நாம் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம்?" ஒரு செந்தமிழ் ரத்தம் புலம்பியதைத் தொடர்ந்து ஒரே களேபரம்!

இறுதியில், முடிவு எடுப்பதில்லையென்ற முடிவோடு கூட்டம் முடிந்தது.

மணி ஏன் திட்டத்தைத் தீவிரமா எதிர்க்கறாரு?"

"மேயரண்ணே! அவரோட சொந்தக்காரங்க கட்சில வட்டம், மாவட்டம். குப்பை எடுக்கிற தொழிலுக்கு ஃபுல் ஆளுங்க சப்ளை அவங்கதான். செம சில்லறை..."

"ஓ...! அதுதான் குப்பையிலே மாணிக்



சுமா? சரி, மத்தவங்க?"

"ஜால்ரா! சும்மா சிங்சக்!"

"நமக்கு லாபம், நகரத்திற்கும் நன்மைன்னு பார்த்தா முன்னேற விட மாட்டேங்கறாங் களே!"

"நீங்க... சரின்னு சொன்னா இவங்கள சரிகட்டிடலாம்!"

"தனியா சரின்னு வேற சொல்லணுமா?" பச்சைக் கொடி காட்டினார் மேயர்.

கா.சு. மணியின் பங்களாவை ஒட்டி முன்னால் பத்து சென்ட் அரசாங்க நிலம். காலி நிலம். மகனுக்குத் தனி வீடு கட்ட அதை வளைத்துப் போட்டிருந்தார். அன்று காலை எந்த இடத்தில் போர் (வெல்) எடுக் கலாமென்று பேசிக் கொண்டிருந்தபோது முதல் லாரி தென்பட்டது. என்ன ஏதென்று புரிவதற்குள் நான்கைந்து லாரிகள் வந்து குப்பையை காலி நிலத்தில் இறக்கித் தள்ளி விட்டு மறைந்தன.

வந்த கோபத்தில் மேயரை அழைத்தார், செல்லில். "நீர்தானே குப்பையிலே மாணிக் கம் இருக்கிறதாச் சொன்னீர். அதான் அனுப்பி வைச்சேன். இன்னும் வரும்!" பச்சென்ற பதிலுடன் செல் செத்தது.

அவ்வளவு திமிரா உனக்கு? காட்டறேன் பார்! பார்! வயிறு அனல் மின் நிலைய மானதில் கறுத்த முகம் சிவந்தது.

ஒரு வாரம் சென்றிருக்கும். காலை தினசரியில் தலைப்புச் செய்தி.

மேயரை சி.பி.ஐ. விசாரணை!

குப்பை மின்நிலைய திட்டத்தில் பல கோடி கைமாறியதா? வெளிநாட்டு நிறுவனத் தின் இந்திய பிரதிநிதி மேயர் மகனின் பள்ளித் தோழன்?

அக்கப்போர் ஆரம்பித்து, ஒருவர் மீது ஒருவர் குப்பையை வாரி வீசி பூசிக் கொண் டனர். இந்த ஒண்டிக்கு ஒண்டியில் திட்டம் குப்பைத் தொட்டிக்குப் போனது!

குடுமிப்பிடி மகோன்னதத்தைக் கண்டு களித்தவர்களில் அந்தப் பெரியவரும் ஒருவர். அவர் களிப்பிற்குக் கூடுதல் காரணமிருந்தது.

கம்பெனியின் போர்ட் ரூமில் அன்று எட் டுப் பேர் ஆவலோடு காத்திருக்க பெரியவர் பேசத் தொடங்கினார்.

"ஜனநாயகம் நாய்க்குடை மாதிரி. நாய்க் குடையால நாய்க்கு என்ன நன்மையோ அத் தனை நன்மைதான் ஜனநாயகத்தால ஜனங் களுக்கும்! ஓர் அறிஞன் சொன்னது. நானும் பார்த்த நிதர்சனம். ஜனநாயகத்தில மக் களுக்குப் பயன்தரக்கூடிய வெகுஜன திட் டங்களை அவ்வளவு சுலபமா செயல்படுத்த முடியாது. தலையெழுத்து!

"உதாரணமா... கொசுக்களை அவை ஜனிக்கிற குட்டையிலோ, கழிவுநீர்க் கால் வாயிலோ அழிச்சிடலாம். முடியறதா? வீட்டு பெட்ரூமிற்கு வரவழைத்து, வந்தப்புறந்தானே

காதில் விழுந்தவை

# அம்மா தரப்பின் அடுத்த நடவடிக்கை!

● தமிழக கால்நடை பராமரிப்புத் துறையின் மொத்த பட்ஜெட் ஆண்டுக்கு எட்டு கோடிதான். ஆனால் அதற்குள் எத்தனை விளையாட்டு! இந்தத் துறையில் இப்போது இரு உயர் அதிகாரிகள். ஒருவர் நிர்வாகத்தை கவனிக்க; மற்றொருவர் கால்நடை பராமரிப்புக்காக. நிர்வாகத் துறையில் இப்படி பகுத்துக் கொடுத்ததை எல்லோரும் பாராட்டும் அதேசமயத் தில் வேறொரு விஷயம் பற்றி இலாக்காவில் இப்போது பலமாக கிசுகிசுக்கப்படுகிறது. இதுவரை உதவிக் கால்நடை மருத்துவர்களே மருந்துகளை நேரிடையாகக் கொள்முதல் செய்து வந்தார்கள். இப்போது அந்த அதிகாரம் இணை இயக்குனர்களிடம் கொடுக்கப்பட்டு விட்டதாம். இது தவிர மருந்து வாங்க ஒதுக்கப்பட்ட தொகை இரண்டு கோடி. தரமான நிறுவனங்களே அற்ப தொகைக்கு மட்டும்தான் மருந்து ஆர்டர் பிடிக்க முடிந்தது என்கிற நிலையில், மிகச் சிறிய நிறுவனம் ஒன்று ஒரு கோடி ரூபாய்க்கு மேல் ஆர்டர் பிடித்து விட்டதாம். கிசுகிசுவின் சாராம்சம் இதுதான்.

● சிவப்பா பிறந்த வருடம் சர்ச்சைக்குரியதாகி அவர் ஓய்வு பெற்றுவிட, ரத்தத்தின் ரத்தங்கள் ஒரு தனி நீதிபதியின் பழைய வரலாற்றை தூசி தட்டிக் கொண்டிருக்கிறார்கள். அந்த நடுநிலை தவறாத நீதிபதி முன்பு உதகையில் பணியாற்றிக் கொண்டிருக்கும்போது ஊழல் கண்காணிப்புத்துறை அலுவலர் ஒருவர் உறவினர் சம்பந்தப்பட்ட வழக்கில் அழுத்தத்துக்கு ஆளாகாமல் தீர்ப்பு வழங்கினாராம். அதனால் கோபமுற்ற அந்த அலுவலர், நீதிபதியின் வீட்டைச் சோதனையிடும் அளவுக்குச் சென்று விட்டாராம். ஆனால் விலங்கமான விவகாரம் ஏதுமில்லாத நிலையில் ஒன்றும் செய்ய முடியவில்லையாம். 'அந்த விஷயத்துக்கு கண், காது, மூக்கு வைத்து நீதிபதியை சங்கடப்படுத்தினாலென்ன' என்று யோசித்துக் கொண்டிருக்கிறார்கள் அம்மாவின் அணுக்கத் தொண்டர்கள்!

● லாகூருக்கு பஸ் விட்டாச்சு! அடுத்து டாக்காவுக்கு ஏப்ரலில் பஸ் விடுகிறார்கள். கல்கத்தா – டாக்கா பஸ் சர்வீஸ் ஏற்பாடுகள் இறுதியாக்கப்பட்டு வருகின்றன. முதல் பஸ்ஸில் பிரதமர், ஜோதிபாசு செல்வார்களாம். இதற்கிடையில் லாகூருக்கு முதல் பஸ் விட்ட லேலண்ட் நிறுவனத்துக்கும் டாட்டா நிறுவனத்துக்கும் "டாக்காவுக்கு முதல் பஸ் விடுவது யார்?" என்பதில் பலத்த போட்டி. இரு நிறுவனங்களும், தலா நான்கு பஸ்களை பெங்களூரில் ஒரே இடத்தில் கூடு கட்டி (Body) தயாராக வைத்திருக்கின்றனவாம். "லேலண்டுக்கு லாகூர் பயணத்தில் நல்ல பப்ளிசிட்டி கிடைத்து விட்டது. இந்தமுறை எங்களுக்குத்தான் அந்த வாய்ப்பைக் கொடுக்க வேண்டும்" என்று 'லாபி'யில் ஈடுபட்டிருக்கிறதாம் டாட்டா நிறுவனம். முடிவெடுப்பது ஜோதிபாசுவின் கையில்தான் இருக்கிறதாம்.

● அம்மா ஆட்சியில் ஆட்களை மிரட்டி சொத்துக்களை வாங்கியது ஞாபகம் இருக்கும். அந்த அளவுக்கு இல்லாவிட்டாலும் சமீபத்தில் கை மாறிய தாஜ்கோரமண்டல் ஹோட்டல் அருகிலுள்ள நிலம் மற்றும் வெலிங்டன் தியேட்டருக்கு எதிரில் உள்ள ஏரியா பற்றியும் ரியல் எஸ்டேட் வட்டாரத்தில் பரபரப்பாக கிசுகிசுக்கப்படுகிறது.

— சஞ்சயன்

விரட்டறோம். அதுக்கு எத்தனை ஆயுதம்! சுருள், மேட், லிக்விட்... ப்பா... பல நூறு கோடி ரூபாய் வியாபாரம்!

இதுபோன்ற சூழ்நிலையால் உந்தப்பட்ட கண்டுபிடிப்புதான் நம்ம கம்பெனியோட "குப்ஜென்". வீட்டுக் குப்பையை எரித்து மின்சாரம் தரக்கூடிய இந்த ஜெனரேட்டர், டீவி, வாஷிங்மெஷினுக்கு அடுத்தபடியா ஒவ்வொரு வீட்டிலேயும் வெகு சீக்கிரத்தில இருக்கப் போகிற சாதனம். நமக்குக் கோடி கோடியா லாபத்தை கொட்டப் போற காமதேனு. குப்பைல கிடைத்த மாணிக்கம்! மாதவன் மேலே விவரிப்பார்" என்று தன் முதல் சுற்றை முடித்தார்.

வாஷிங் மெஷினில் பாதியளவு இருந்த அந்த சாதனம் எப்படி வீட்டுக் குப்பையை தன் வயிற்றில் எரித்து, அனல் சக்தியைத் தேக்கி, சோலார் செல்கள் மூலம் லைட், டீவி, மின்விசிறி, இவற்றை இயக்குகிறதென்று காட்டினார் மாதவன்.

வரவிருக்கும் லாபத்தைக் கணக்குப் போட்டபடி எட்டுப் பேர் கூட்டம் கலைந்தது.

எதிர்பார்த்தபடியே 'குப்ஜென்'னுக்கு நல்ல வரவேற்பு. மார்கெட் 'குப்'பென்று பிடித்துக் கொண்டது.

"என்ன தப்பா கேட்டேன். இப்படி சாமான்செட்டை வீசி அடிக்கறீக? நான் என்ன ஜென் காரா கேட்டேன். நம்ம வீட்டுக்கு ஒரு 'குப்ஜென்' வாங்கச் சொன்னேன். தப்பா?" மேயரின் மனைவி மட்டும் புரியாமல் அவரை சண்டைக்கு வலித்தாள்!

எடிட்டர் : மஞ்சள் சேலை, மஞ்சள் ஜாக்கெட், கையில் வேப்பிலைக் கொத்து சகிதம் நடிகை சிம்ரனை ஒரு போட்டோ எடுத்துட்டு வந்திடு!''

போட்டோ கிராபர் : எதுக்கு சார்?

எடிட்டர் : அடுத்த இதழ் மாரியம்மன் சிறப்பிதழா வருது... அட்டையில் போடத்தான்!

– உ. ராஜாஜி

''பஜ்ஜி சொஜ்ஜி வேணாம், வேற ஏதாவது டிபன் செய்ங்கன்னு பிள்ளை வீட்டுக்காரங்க சொல்றாங்களே, ஏனாம்...?''

''பஜ்ஜி, சொஜ்ஜி சாப்பிடலே, அவங்க பொண்ணு பார்க்கப் போறாங்கன்னு எல்லோரும் தப்பா நினைக்கிறாங்களாம்!''

– கே. சதீஷ்குமார்

''எங்க விட்டுல எற்கெனவே காப்பி சாப்பிட்டிருக்கீங்களா சார்...?''

''ஏன் அப்படி கேக்கறீங்க?''

''காப்பி சாப்பிடறீங்களான்னு கேட்டதுக்கு, அவசர அவசரமா வேண்டாம்னு சொன்னீங்களே, அதான்!''

– சீர்காழி ரேவதி

''அடாடா! நாம ஊரை விட்டு ஓடுறதை உங்க ஏரியாவுல எல்லார் கிட்டேயும் சொல்லிட்டியா; அப்புறம் என்ன ஆச்சு?''

''வாசல்ல எல்லாரும் மொய் கவரோட தயாரா நின்னு வழியனுப்பி வைச்சாங்க!''

– அம்பை தேவா

''என்னப்பா இது, திடீர்னு சாமியார் 'ஓம் க்ரீம் ரீம் க்ரீம்'னு மந்திரம் சொல்றாரு?''

''ஐஸ் க்ரீம் கடையைப் பார்த்துட்டார், அவரால அடக்கமுடியலை, அதான்!''

– வெ. ராஜாராமன்

''அவர் போலி டாக்டர்னு எப்படி கண்டு பிடிச்சீங்க?''

''காலிலே ஆணி இருக்குன்னு சொன்னதுக்கு, தண்ணி படாமே ஜாக்கிரதையா பார்த்துக்குங்க, துருப் பிடிச்சுடப் போவுதுன்னு சொன்னாரே...!''

– ப. கந்தசாமி

## பயந்தரில் பயங்கரம்



• பயந்தரில் பயங்கரம்

குழாயைத் திறந்தால் தண்ணீர் வரவில்லை எனும்போது, நிலைமை சரியாவதற்கு, ஏதோ இரண்டு மணி நேரமாயிற்றென்றால், பொதுமக்கள் போனால் போகிறதென்று காத்திருப்பார்கள். இரண்டு நாள், மிஞ்சி மிஞ்சிப் போனால் இரண்டு வாரம் என்பதே அதிகபட்சமாயிருக்க... இரண்டு மாதம்கூட இல்லை... இரண்டு வருடம் வெயிட் பண்ணச் சொன்னால்... எப்படி? பொறுத்தது போதுமெனப் பொங்கி எழுந்துவிட்டனர். தண்ணீர் டாங்கர் விலை 1500, 2000 ரூபாய் என பயமுறுத்த, ஹோலி விளையாடிய சுவடுகூட மறையாமல், கலர் கலராய் கலவரப்படுத்தினர். ட்ரெயின்களை நிறுத்தி, ஸ்லீப்பர்களைக் கொளுத்தி, ட்ராக்குகளை சேதப்படுத்தி, பஸ்களை எரியூட்டி, வெறியாட்டம் ஆடினர். இதில் ரொம்பவும் பாதிக்கப்பட்டது +2 பரீட்சை எழுத வேண்டிய மாணவர்கள்தான். குறித்த நேரத்தில் சென்டர்களுக்குப் போக முடியாமல் தவித்தனர். பக்கத்திலிருந்த சென்டர்களில் சென்று எழுதச் சொல்லி பொது அறிவிப்புகளை கல்வித் துறை அலறவிட்டும், இரண்டு பேர்தான் இதனால் பயனடைந்தனர். போதாக்குறைக்கு அரசு பஸ் நிர்வாகம் வேறு, இனி பயந்தருக்கு பஸ் விடுவதில்லை என சத்தியப் பிரமாணம் செய்துவிட்டது! பாவம் பயந்தர்வாசிகள்! குடிநீர்ப் பிரச்னையே தீரவில்லை; அதற்குள் அது போக்குவரத்துப் பிரச்னையை வேறு குட்டி போட்டிருக்கிறதே?

## கவுன்சிலுக்கு கல்தா

பெரிய எதிர்பார்ப்புகளுடன் மேயர் - இன் - கவுன்சில் திட்டத்தை அமலாக்கி ஒரு வருடம்கூட ஆகவில்லை; அதற்குள் அதற்கு சமாதி கட்டும் பணிகளைத் துவங்கி விட்டார்

# ஊழலில் திளைக்கும் மும்பை மாநகராட்சி!

ராணே; ஒவ்வொரு செங்கல்லாக பி.ஜே.பி - சிவசேனா கார்ப்பொரேட்டர்களே எடுத்துத் தரத் துடியாயிருக்க, சிமெண்ட் வைத்துப் பூச தாக்கரேவும் தயாராகி விட்டார். 12 நபர்கள் அடங்கிய கவுன்சிலுக்கு அதிக அதிகாரங்களைத் தந்தால், பொதுமக்கள் பயனடைவார்கள் என்று

நினைத்திருந்தார்கள்; அந்தப் பன்னிருவர் மட்டுமே பயனடைந்த கதைகள் இப்போதுதானே வெளி வருகின்றன? கஜானாவே காலியாக இருக்கையில், இவர்களின் 'காபின்' விஸ்தரிப்புக்கு மட்டும் 4 கோடி செலவிட்டிருப்பது, 'பதம்' பார்க்க ஒரு பருக்கைதான்; மற்றபடி ஒரு பானை சோறே ஊழலில் கொதித்துக் கொண்டிருக்கிறது. இனி, பழைய குருடி கதவைத் திறடி என்று கமிஷனர் காலிலேயே விழ வேண்டியதுதான்!



• கூத்தாளைக் குதித்த வருமா?

## பறக்கும் ஹசாரே

அண்மையில் சோனியா காந்தி மும்பைக்கு வந்து, ஷண்முகானந்தாவில் மாநில அரசை மறைமுகமாகத் தாக்கியதைக்கூட தாக்கரே அவ்வளவாகக் கண்டு கொள்ளவில்லை; ஆனால் ஹசாரே தில்லிக்குப் பறந்ததுதான் அவருக்கு ஏக எரிச்சலைக் கிளப்பியிருக்கிறது. 'ஒரு சமூக சேவகரால் எப்படி விமானத்தில் பறக்க முடிகிறது? கணக்குக் காட்ட வேண்டும்' என தாக்கரே சவால் விட்டிருக்கிறார். அண்ணனா பயந்தவர்? "நான் கணக்கு காட்டத் தயார்; உன்னால் அப்படி முடியுமா தம்பி?" என பதில் சவாலை ஏசியிருக்கிறார். கிராம வளர்ச்சித் திட்டங்கள் சம்பந்தமாக ஆந்திரா, மத்தியப் பிரதேசம் போன்றவற்றின் முதல்வர்களும், டெல்லியிலிருந்து பல இயக்கங்களும், இவருக்கு ஏர் – டிக்கட் அனுப்பி, வரவழைத்து கலந்தாலோசிக்கின்றனராம். சிலர் ஹெலிகாப்டர் வசதியே கூட செய்து தருகின்றனராம். ஹூம்... சமூக சேவை செய்தாலும், அண்ணாவைப் போலிருக்க வேண்டும்! பாந்த்ரா ஸ்டேஷனருகே, செருப்புத் தைக்கும் பெண்மணி ஒருவர் தினமும் 30-40 பூனை, நாய் பரிவாரங்களுக்கு உணவிடுவதாக ஸ்டார் டீ.வி.யில் காட்டினார்களே... அவர்களுக் கெல்லாம் யாரும் ஒரு சைக்கிள்கூட தர மாட்டேனென்கிறார்களே!

## ஓர சீட்டை ஓரங்கட்டி...

பஸ்ஸோ, ரயிலோ, காரோ... பயணத்தின்போது ஓர சீட் என்றால் தனி மவுசுதான்! அதைப் பிடிக்க போட்டா போட்டிதான்! ஆனால் இதென்ன... ஓர ஸீட் கிடைத்தாலும்கூட, எல்லோரும் 'நீங்க வேணா உக்காருங்க' என்று எளிதில் தியாகிக்கிறார்களே மும்பையில்! எல்லாம் 'கல்'லடி கைங்கர்யம்தான்; மிக அண்மையில் ரமேஷ் தவே என்ற பத்திரிகையாளர் கண்ணை இழந்தார் – ஓர இருக்கையில் அமர்ந்துகொண்டு. அதனால் இப்போதெல்லாம் யாரும் அங்கே உட்காரவே நடுங்குகிறார்கள்!

## டெயில் பீஸ்

வந்து விட்டது அல்ஃபோன்ஸோ மாம்பழம், கிராஃபோர்ட் மார்க்கெட்டுக்கு! விலை? டஜன் 1200-1500 ரூபாய்! ஒரு மாம்பழம் நூறு ரூபாய் விலை கொடுத்து வாங்குபவர்கள் இருக்கிறார்களா மும்பையில்? ஏனில்லை? ஷ்... ஷ்...தொழில் முதலைகள் மட்டுமில்லை... அரசாங்கத்திலேயே பழம் சாப்பிட்டுக் கொட்டை போட்டவர்கள் இல்லையா...

— ஜெயஸ்ரீ ராஜ்



# ஜெயித்த பிறகு நீங்கள் தொகுதிப் பக்கமே வரவில்லையாமே..?

**— நீலகிரி தொகுதி எம்.பி. மாஸ்டர் மாதனிடம் கேட்டோம்.**

"இது யாரோ வேண்டாதவர்கள் ஊப்பிவிட்ட புரளி. பார்லிமெண்ட் கூடுகிற நேரம் போக மீதி நாட்களில் நான் தொகுதியி லேதான் இருக்கிறேன். எந்த நேரத்துல ஜனங்க வீடு தேடி வந்தாலும் பிரச்னையை உடனடியா கேட்டு சம்பந்தப்பட்ட துறைக்கு அனுப்பிச் சிட்டே இருக்கேன். சுருக்கமா சொன்னா என் சொந்தப் பிரச்னை என்னன்னு கூட எனக்கு ஒரு வருஷமா மறந்தே போச்சு!"

"சொந்தப் பிரச்னை மறந்து போற அளவுக் குத் தொகுதிக்கு அப்படி என்ன செஞ்சிருக் கீங்க?"

"சொல்லிக்கிட்டே போவலாம். ஊட்டியில் ஒரு நல்ல டவுன் ஹால் கிடையாது. சமூகக் கூடம் கிடையாது. அதை என் எம்.பி நிதியில உடனடியா கட்ட ஏற்பாடு செஞ்சிருக்கேன். நீலகிரித் தொகுதியிலே பிணம் எரிக்க பல பிரச்னை. அதற்கு வசதியா எலக்ட்ரிக் மயானம் ஏற்பாடு செஞ்சிருக்கேன். ஐம்பது வரு ஷமா யாருமே கண்டுக்காத நெல்லித்துறை பாலத்துக்குப் பொறுப்பேற்று நிதி ஏற்பாடு செய்திருக்கேன். தொண்டாமுத்தூர் பகுதியில யானைங்க வந்து பயிரை சேதப்படுத்தறதா ஜனங்க முறையிட்டதுல மின்சார வேலி போட மட்டும் 10 லட்சம் ரூபா ஒதுக்கித் தந்திருக்கேன். எனக்கிருக்கிற எம்.பி. நிதியை சட்டமன்றத் தொகுதி வாரியா பிரிச்சு, அந்தந்தப் பகுதி அபி விருத்திக்குக் கொடுத்திருக்கேன். கடந்த பதி னொரு மாதத்தில் மட்டும் 163 இருதய நோயாளிகளுக்கு பிரதமர் நிதி உதவி வாங்கித் தந்திருக்கேன். இங்கே பள்ளிக் கூடங்களுக்குச் சரியான கட்டடம் இல்ல. ஃபர்னிச்சர் இல்லை. எல்லாவற்றையும் நேரடியா பார்வை யிட்டு, அவற்றுக்கு ஏற்ற மாதிரி நிதி ஒதுக் கிட்டு வர்றேன்..."

"உங்க தொகுதி தொழில் ரீதியா நாட்டிலேயே மிகவும் பின் தங்கிய பகுதி. குற்றுயிராய்க் கிடக்கும் HPF (ஹிந்துஸ்தான் போட்டோ பிலிம்) தொழிற்சாலை மட்டுமே நீலகிரியின் உயிர் நாடி.. அதற்கு ஏதாவது?"

"ஹெச்.பி.எஃப்பை பொறுத்தவரை முயற்சி எடுத்துட்டே இருக்கேன். அதைப் பற்றி பேசாத நாளில்லை. கிட்டத்தட்ட 130 கோடி ரூபாய் நிதி அளித்தால்தான் அதனைக் காப்பாற்ற முடியும். ஆசியாவிலேயே சிறந்த மிகப் பெரிய தொழிற்சாலை. வாழப்பாடி, வை.கோ உட்பட 26 தமிழக எம்.பிக்களிடம் கையெழுத்து வாங்கி, அவர்களையும் அழைத்துப் போய் பிரதமரை சந்தித்து அதனைக் காப்பாற்ற கோரிக்கை வைத்தேன். தொழில் அமைச்சருக்கு பெட்டி ஷன் மேல பெட்டிஷனா கொடுத்துட்டிருக் கேன்."

"விஸ்கோஸ் மறுபடியும் தன் கழிவை வெளியேற்றி, விவசாய நிலங்களை பாழ்படுத்து கிறதாமே?"

"இது ஒரு பலமுனைப் பிரச்னை. ஒரு பக் கம் விவசாயம், சுற்றுச் சூழல் பிரச்னை. அடுத் தது அதுவொரு தொழிற்சாலையா இருக் கறதால பலருக்கும் வேலை வாய்ப்பு. இதை யெல்லாம் அனுசரித்து செய்ய வேண்டியிருக்கு. இது இன்னும் என்னோட பார்வைக்கு எந்த தரப்பும் கொண்டு வரலை. ஆனாலும் கவனிச் சுட்டுத்தான் இருக்கேன்."

"பாண்டியாறு - புன்னம்புழா அணைத் திட்டம்?"

"இரண்டு மாநிலப் பிரச்னை. என் தொகுதி யில் கூடலூர் மக்கள்ல கொஞ்சம் பேர் பாதிக் கப்படறதா சொல்றாங்க. நம்ம நிலைமையை யோசிச்சா சீக்கிரமா அந்த திட்டம் வரணும். இந்த அரசு அந்தப் பகுதி மக்களுக்கு பாதிப்பு ஏற்படாத வகையில் அதைச் செறிவுபடுத் தணும்!" ●

சந்திப்பு, படம் : **கேயெஸ்வி**

# இ.சி.ஜி. எடுக்க ஐந்து

ஐந்து நாள் சேர்ந்தாற் போல் காய்ச்சலடித்தால் – ரத்தப் பரிசோதனை. 'வயிற்றுக்கு மேலே ஏதோ குத்தறாப் போல வலியெடுக்கிறது டாக்டர்' என்றவுடன் 'எதற்கும் ஒரு இ.சி.ஜி. எடுத்துப் பார்த்திடலாமே' என்று சொல்கிறார் அவர். இருமல் படுத்தினால் எக்ஸ்ரே என்று டாக்டர்கள் எழுதி விடுகிறார்கள்! சாதாரண பரிசோதனைச் சாலையில் கூட எண்பது, நூறு என்று தீட்டி விடும் சூழ்நிலையில் நட்சத்திர ஆஸ்பத்திரிகளைப் பற்றி கேட்கவே வேண்டாம்!

இந்தச் சூழ்நிலையில் ஒரு ரூபாய்க்கும், இரண்டு ரூபாய்க்கும் ரத்தப் பரிசோதனை என்றால் உங்களால் நம்ப முடிகிறதா? இது மட்டுமல்ல; எந்த விதமான சிக்கலான ரத்தப் பரிசோதனைக்கும் அதிகபட்சமாக பத்து ரூபாய்க்கு மேல் கட்டணம் கிடையாது. இ.சி.ஜி. எடுக்க ஐந்து ரூபாய்தான். பெரிய அளவு எக்ஸ்ரே எடுப்பதற்கு நாற்பத்தைந்து ரூபாய்தான். இது போன்ற அதல பாதாள சலுகைக் கட்டணத்தில் எங்கே பரிசோதனை செய்கிறார்கள் என்கிறீர்களா?

வாருங்கள் திருவான்மியூருக்கு.

ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கரா மருத்துவ அறக்கட்டளை என்ற அமைப்பு, ஏழைகளுக்கு மருத்துவம் பார்ப்பதற்காக பெசன்ட் நகர்ப் பகுதியில் (1985-ல்) இரண்டு ரூபாய்க் கட்டணத்திலேயே, டாக்டர் ஃபீஸ், மருந்து என்று அசத்தியது. காலப் போக்கில் அந்த சின்ன டிஸ்பென்ஸரி இன்று நான்காகக் கூடியிருக்கிறது.

சேவை மனப்பான்மையுடன் டாக்டர்கள் செயல்பட்டாலும் நன்கொடைகள் மூலம் மருந்துகள் இலவசமாகக் கொடுக்கப்பட்டாலும், டெஸ்ட், அது, இது என்று வரும்போது, நோயாளிகள் பணம் செலவழிக்க வேண்டியதாக இருக்கிறது. கூலித் தொழிலாளர்களும், ரிக்ஷா இழுப்பவர்களும், வீட்டுப் பணிப் பெண்களும், திடீரென்று ஐம்பது, நூறு என்றால் எங்கே போவார்கள்? இதற்கு என்ன செய்வது என்று யோசித்த அறக்கட்டளை, ஒரு பரிசோதனைக் கூடத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டது. "நாங்கள் அனுப்பும் நோயாளிகளிடம் குறைந்த கட்டணம் வாங்கிக் கொள்ளுங்கள்; உங்களது நஷ்டத்தை நாங்கள் ஈடு செய்கிறோம்" என்று சொன்னது. இந்த ஏற்பாடு சில காலம் நடந்தாலும், அறக்கட்டளை நிர்வாகிகளுக்கு திருப்தி இல்லை.

• காத்திருக்கும் நோயாளிகள்



நாமே ஒரு பரிசோதனைச் சாலை நடத்தினால் இன்னமும் குறைந்த கட்டணத்தில் சேவை செய்யலாமே என்று யோசிக்கத் துவங்கினார்கள்.

அப்புறம் என்ன நடந்தது?

1985லிருந்தே அறக்கட்டளையோடு தொடர்பு கொண்டு செயல்பட்டு வரும் டாக்டர் ஸ்ரீதரிடமும் டாக்டர் பார்த்தசாரதியிடமும் கேட்டோம்.

"சென்னை தெற்கு ரோட்டரி சங்கத்தினர், வேறு ஒரு சேவை நிறுவனம் பரிசோதனைச் சாலை துவங்குவதற்கான கருவிகளைக் கொடுத்திருந்திருக்கிறார்கள். ஆனால் என்ன காரணத்தினாலோ அந்த கருவிகள் சரியாகப் பயன்படுத்தபடாமல் இருந்தன. இந்த நிலையில் எங்கள் எண்ணத்தைத் தெரிந்து கொண்ட ரோட்டரி கிளப், அவற்றை எங்களுக்குத் தரத் தயாராய் இருந்தது.



• எக்ஸ்ரே கருவி

"எங்களுக்கு வாப் நிறுவ இடம் கிடையாதே! யோசித்தோம். மறுபடியும் காஞ்சிப் பெரியவரின் அருளாசியை மனத்தில் எண்ணியவாறே பரிசோதனைச் சாலையை நடத்த

• சோதனை கூடம்




காஞ்சி சங்கரா ஃபவுண்டேஷன் என்ற அமைப்பைத் துவங்கினோம். எங்களது அடுத்த கட்ட சேவை பற்றி கேள்விப்பட்ட நண்பர்களும், அன்பர்களும் தாராளமாக உதவி செய்ய, திருவான்மியூரில், அடுக்குமாடி கட்டடத்தில் ஒரு பகுதியை வாங்கி லாபைத் துவங்கினோம். கிட்டத்தட்ட ஒரு லட்சம் மதிப்புள்ள ஆட்டோ அனலைசர் என்ற கருவியை ரோட்டரி கிளப் கொடுத்தது. நாளடைவில் எக்ஸ்ரே, இ.சி.ஜி. என்று வாங்க பல சேவை உள்ளங்கள் உதவின!"

"கற்பனைக்கெட்டாத வகையில் இவ்வளவு குறைந்த கட்டணத்தில் எப்படி பல பரிசோதனைகளைச் செய்ய முடிகிறது?"

"மற்றவர்களைப் பற்றி நாங்கள் சொல்லக் கூடாது. பெரும்பாலான நிறுவனங்களில் நிர்வாகச் செலவு மற்றும் வேறு செலவுகள் காரணமாக அதிகமாக சார்ஜ் செய்யலாம். ரத்தத்தில் தொற்று (infection) இருக்கிறதா என்று பார்க்க இ.எஸ்.ஆர் என்று ஒரு சோதனை இருக்கிறது.

"இந்த சோதனைக்கான ரசாயனத்தின் மதிப்பு பத்துப் பைசா கூட இருக்காது. மிகச் சுலபமான சோதனையும் கூட. நாங்கள் இதற்கு ஒரு ரூபாய் சார்ஜ் செய்கிறோம். வெளியில் இருபது ரூபாயிலிருந்து நூறு ரூபாய் வரை சார்ஜ் செய்கிறார்கள்!"

"உங்கள் பரிசோதனைச் சாலையில் பரிசோதனைகள் செய்து கொள்ள வேண்டுமானால் உங்கள் டாக்டர்கள் செய்யும் சிபாரிசுகளின் மூலமாகத்தான் செய்ய வேண்டுமா?"

"எங்கள் சகோதர அமைப்பான காஞ்சி காமகோடி சங்கரா மருத்துவ அறக்கட்டளை நடத்தும் நான்கு மருத்துவ மையங்களிலிருந்து வரும் நோயாளிகளுக்கு, மிகக் குறைவான கட்டணமே சார்ஜ் செய்யப்படுகிறது. பிற சேவை நிறுவனங்களின் மூலமாக வும் பள்ளிகள் மூலமாகவும் வரும் நோயாளிகளுக்கு அடுத்த கட்ட சலுகைக் கட்டணம். பிற டாக்டர்களிடம் சீட்டு வாங்கி வரும் நோயாளிகளுக்கென்று இன்னொரு வகைக் கட்டணம் வைத்திருக்கிறோம். ஆகினும் இந்த மூன்றுவிதமான கட்டணங்களுக்கும் இடையில் அதிக வித்தியாசம் ஏதும் இல்லை!" என்கிறார்கள்.

"பொது மக்களிடமிருந்து நல்ல ஆதரவு கிடைக்கிறதா?"

"காஞ்சிப் பெரியவரின் ஆசிகள் தாராளமாக இருப்பதால் சோதனைச் சாலையை நிர்வகிக்க, தொய்வில்லாமல் உதவிகள் கிடைக்கின்றன. இருப்பினும், நமது நாட்டு பட்ஜெட் போன்று பற்றாக்குறை நிலைதான். பொது மக்கள் இன்னமும் அதிக அளவில் பயன்படுத்த முன் வந்தால் இப்போதிருக்கும் நிதிப் பற்றாக்குறையை நீக்கி, அதிக வசதிகள் செய்ய வாய்ப்பிருக்கிறது" என்கிறார்கள் டாக்டர்கள் ஸ்ரீதரும், பார்த்தசாரதியும்.

— ஸ்ரீநிவாசன்

டீ.வி. விளம்பரத்தைக் கண்கொட்டாமல் பார்க்கும் குழந்தை போல தன் முகத்தையே கவனித்தபடி நிற்கும் வித்யாவை புதிராய் நோக்கினேன்.

இவளுக்கும் குழந்தை முகம்தான். ஆனால் இருபது வயதுக் குழந்தை. என் மகனின் கைப் பிடித்து, எனக்கு மருமகளாகி விட்ட குழந்தை.



காலையில் ஐந்து, ஐந்தரைக்கெல்லாம் எழுந்துவிட வேண்டும், ஏழு மணி வரை தூங்கக் கூடாது என்று கடந்த ஐந்து நிமிடமாக நான் போதித்ததை காதில் வாங்கினாளா, இல்லையா?

கடந்த இருபது வருடமாக பல மாணவ, மாணவிகளை அதட்டி, உருட்டி வழிக்குக் கொண்டு வரும் கண்டிப்பான ஆசிரியையான எனக்கே சவால் விடுகிறாளே இவள்?

"ஏய் வித்யா? நான் சொன்னது புரிஞ்சுதா?"

குரலில் ஆந்திர ஆவக்காய் காரத்தைக் காண்பித்தேன்.

"அம்மா! என்ன ஒரு அழகு!"

என் முகத்திலிருந்து கண்ணை எடுக்காமல், லயித்துப் போன உணர்வுடன் சொன்னாள்.

"அத்தை, உங்க கண்கள் இருக்கே, ஹா! அதைப் பார்த்துட்டேன்னா, அப்படியே என்னை உள்ளே ஈர்த்துடுது. மந்திரம் போட்ட மாதிரி நின்னுடறேன். இது உங்க பரம்பரைச் சொத்தா? இந்த வயசுலேயே இப்படி ஆளை அடிச்சு இழுக்குதுன்னா, உங்க டீன்ஏஜ் வயசுலே எப்படி இருந்திருப்பீங்க? அத்தை, ப்ளீஸ், அதைப் பற்றி ஏதும் கதை இருந்தாச் சொல்லுங்களேன்."

அருகில் வந்து என் முகவாய்க்கட்டையைப் பிடித்து ஆட்டினாள். அத்தனை நேர என் கோபமும், கண்டிப்பும் மணலில் ஊற்றிய தம்ளர் தண்ணீராய்க் காணாமல் போனதை உணர்ந்தேன்.

மனசுக்குள் மெல்லிய கர்வம் தலைதூக்கியதை, தலையைச் சிலுப்பி அடக்கினேன்.

"ஏய், நான் ஒண்ணு கேட்டா, நீ ஒண்ணு சொல்றியே?"

"அச்சச்சோ, நீங்க என்ன கேட்டீங்க? ஆங், சீக்கிரமே எழுந்திருக்கணும்தானே! அத்தை, என்னிடம் உங்களுக்குப் பிடிச்சது எது? இந்த மூக்கு, கண், தலைமுடி... பாருங்க எவ்வளவு பெரிசு, குஞ்சலம் வைக்காமலே!"

## கிருஷ்ணா

"எதுக்கு இதெல்லாம்?"

"எனக்கு உங்க கண்ணைக் கொடுத்துடுங்க. என்னோட இளமையை வேணும்னாலும் எடுத்துக்குங்க. யயாதி கதை மாதிரி அம்மாடி, என்ன ஒரு ஆகர்ஷணம் உங்க கண்ணுல. வழுக்கி, வழுக்கி உள்ளே போயிண்டேயிருக்கேன். நான் பார்க்க

# மௌனமொழி மந்திரம்



மாட்டேன்பா.''

அவசரமாய் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

"ஏய் வாலு, சீக்கிரம் போய் பல் தேய்ச்சுட்டு வா.''

"எதுக்கு? அதே கழுநீர் காப்பி குடிக்கவா?''

"ஏய்!''

'ஐயையோ, சாரி அத்தை. உங்க தெற்றுப்பல்தான் உங்க முகத்துக்கே கம்பீரம். யாரும் சொன்னாங்கன்னு பிடுங்கிடாதீங்க. அவர் இன்னும் தூங்கறார் பாருங்க. என்னைத் திட்டின மாதிரி, அவரையும் திட்டி எழுப்பி விடுங்க. நான் வேணும்னா ஒளிஞ்சு நின்னு கேட்கவா?''

கடைசி வரிகளில் குரல் அமுங்கிப் போய் கண்ணைச் சிமிட்டியபடி ரகசியமாய்க் கேட்டாள்.

இவள் விளையாட்டு குணம் கொண்ட பெண்ணா, இல்லை எத்தனை வயதானாலும் மாறாத பிறவிக் குணமா இது?

அடுத்த நாள் காலையில் எழுந்து ஹாலுக்கு வந்தபோதே கவனித்தேன்.

என்ன இது, கொல்லைக் கதவு திறந்து கிடக்கிறது?

மெதுவாய்ச் சப்தமிடாமல் சென்று இணற்றடியை எட்டிப் பார்த்தேன்.

தோய்க்கும் கல் அருகில் வித்யா நின்று கொண்டிருந்தாள். முகத்தில், கண்காட்சியில் குடைராட்டினத்தைக் கண்ட குழந்தையின் வியப்பும், குதூகலமும்.

"வித்யா!''

என் குரல் கேட்டதும் ஓடிவந்து

வாயைப் பொத்தினாள்.

"அத்தை சத்தம் போடாம பாருங்க. அதோ..."

அவளின் ஒரு கை என் வாயைப் பொத்தியிருக்க, மற்றொரு கை என் தோளைச் சுற்றி அணைத்து கிணற்றடிக்குக் கூட்டிச் சென்றது.

அவளின் இந்த உரிமையும், அதட்டலும் எனக்குள் எதையோ திறந்து விட, அவள் காட்டிய திசையில் பார்த்தேன்.

குருவிக் கூடு. மாமரக் கிளை ஒன்று சற்று தாழ்ந்து வளர்ந்திருந்தது கிணற்றடி அருகே. அதில்தான் குருவி கூடு கட்டியிருந்தது.



"அட சீக்கிரமா வெட்டப்பா... போகணும்!"

"சார்! சீக்கிரம் வெட்றதுக்கு இது தாசில்தார் ஆபீஸோ, போலீஸ் ஸ்டேஷனோ இல்லே. சலூன்! பொறுமையாத்தான் வெட்ட முடியும்!"

– சீத்தாதம்பி

"அத்தை, ரெண்டு குஞ்சுங்க பொரிஞ்சிருக்கு. அதோ, அதோ, எப்படி தலையை மட்டும் நீட்டுது பாருங்க. சத்தம் போட்டா பயந்துடும் இல்லே. எவ்வளவு அழகு. அம்மாடி! அப்படியே கையில எடுத்து முத்தம் கொடுக்கணும் போலத் தோணலே. தொட்டால் வலிக்குமோ அதுகளுக்கு. அதோட அம்மா எங்கே? அதோ பாருங்க. ஒரு குருவி பறந்து வருது. அம்மாவேதான். எப்படிக் கத்துது பாருங்க. ஜேசுதாஸ் குரல் தோத்துது இந்த குட்டிங்க போடற சத்தத்துக்கு முன்னாடி. அம்மா குருவி, நம்மளையே பாக்குது பாருங்க. பயப்படுதோ? கவலைப்படாதே அம்மா குருவி, நாங்க ஒண்ணும் செய்ய மாட்டோம். நம்ம பாஷை அதுக்குப் புரியலே போலிருக்கு. அத்தை வாங்க."

கையைப் பிடித்து இழுத்தாள்.

"எங்கே?"

"மாடிக்கு. அங்கிருந்து பார்த்தால், குருவிக் கூடு இன்னும் நல்லாத் தெரியும். அதுகளுக்கும் பயம் இருக்காது."

இழுத்துக் கொண்டு ஹாலுக்கு வந்தவளைத் தடுத்தேன்.

"குருவியையும், புறாவையும் பார்த்துக்கிட்டு இருந்தா யார் சமைக்கறதாம்? அடுப்படியிலே வேலை இருக்கு."

கையை விடுவித்துக் கொண்டு அடுப்படிக்குச் சென்றால் ஆச்சர்யம் காத்திருந்தது.

டிபனும், சமையலும் தயார் நிலையில் மேடையிலிருந்தது.

"நேத்து நீங்கதானே சீக்கிரம் எழுந்துக்கச் சொன்னீங்க. அதை நினைச்சுண்டே படுத்திருந்தேனா, நாலரைக்கெல்லாம் விழிப்பு வந்துடுத்து."

முகமெல்லாம் சிரிப்பாய்ச் சொன்னவளை அதிசயமாய் நோக்கினேன்.

"பரீட்சையிலே நூறு மார்க் வாங்கற மாணவனைப் பாராட்ட மாட்டீங்களா?"

சிணுங்கலுடன் கேட்டவளை நெஞ்சோடு அணைத்துக் கொள்ள ஆசை வந்தது. பழக்கமில்லை. எதுவோ தடுத்தது.

"மாடிக்குப் போகலாம்னு சொன்னியே."

"ஐ, வாங்க!"

குதியலுடன் முன்னே ஓடியவளை மனசுக்குள் பொங்கி, வெளியே வர வழி தெரியாமல் தவிக்கும் உணர்வுடன் பின் தொடர்ந்தேன்.

காலைப் பொழுதின் குளிர்ச்சி, மொத்த உடலையும், உணர்வையும் சிலீரிட வைத்தது.

சிவந்த கன்னத்துடன் வானம் கிழக்கு திசையில். பறவைகளின் சப்தஸ்வரங்கள், மாசுபடிய ஆரம்பிக்காத காற்று. குனிந்து தெருவைப் பார்த்தேன். எங்கள் வீட்டு வாசலில் தாமரைப் பூ கோலம். வித்யாவின் கைவண்ணம். பசு மாடும், கன்றுமாய் தலையில் முண்டாசு கட்டிய கோனார் போவது தெரிந்தது. பக்கத்து வீட்டிலிருந்து கைக் குழந்தையின் அழுகையும், 'ரே,ரே' என்று அதைச் சமாதானப்படுத்தும் பெண்ணின் குரலும் கேட்டது.

கிழக்கே தெரியும் வெளிச்சப் பிரவாகத்தை வெறித்தபடி நின்றேன்.

எனது இத்தனை கால குடும்ப வாழ்க்கை அனுபவத்தையே புரட்டிப் போட்டு, புது ரத்தம் பாய்ச்சி, அழுங்கி, நைந்து கிடந்த மனவெளியில் காற்றுப் புகுந்து அழுங்கலை நேராக்கி உப்ப வைத்தது போல ஒரு சிலிர்ப்பு.

வித்யாவை நெருங்கி அவள் விரல்களுடன் என் விரல்களைக் கோத்துக் கொண்டேன்.

"இத்தனை வருடம் இந்த வீட்டுலே இருந்திருக்கேன். மாடிக்கும் பல தடவை வந்திருக்கேன். இது புதுசாயிருக்கு வித்யா!" என்றேன் நெகிழ்ச்சியாய்.

"எப்பவும் இருக்கற மாடிதான்! ஆனால் பார்க்கற சூழல், நம்ம மனசுல ஓடற எண்ணத்தைப் பொறுத்து அது சந்தோஷமாகவோ, யந்திரத்தனமாகவோ, இல்லை வெறும் சிமெண்ட், செங்கல் தளமாகவோ ஆயிடுது. இல்லை அத்தை?"

சிறு வயதில் ஒருமுறை எனக்கு கழுத்துச் சுளுக்கு ஏற்பட்டபோது, எங்கள் வீட்டில் வேலை செய்யும் முனியம்மாதான் எடுத்தாள். உட்கார வைத்து, தலையை இடமும், வலமுமாக மெல்ல ஆட்டி, சடக்கென ஒரு ஒடி ஒடிப்பாள். வலிக்கவும் செய்யும், கூடவே சுளுக்கு மறைந்ததால் இதமாகவும் இருக்கும்.

வித்யாவும் சுளுக்கு எடுப்பவள் மாதிரிதான். விளையாட்டுத்தனமாய் பேசுபவள். சடாரென இப்போதே ஏதாவது கேட்டு விடுவாள். அவள் சாதாரணமாய்க் கேட்டாலும், எனக்குள் அது ஆயிரம் அலைகளை உண்டு பண்ணிவிடும்.

"அத்தை அப்படியே ஒருத்தர் கையை ஒருத்தர் பிடிச்சுக்கிட்டு கிறுகிறுன்னு சுத்தலாமா?"

"ஐயையோ!"

"அட, பயப்படாதீங்க."

நான் யோசிப்பதற்குள் என் இரு கை விரல்களை கெட்டியாய்ப் பிடித்தபடி இரண்டு சுற்று சுற்றி விட்டாள்.

"ஏய் போதும், தலை சுத்துது."

மாடிப்படி முடிவில் நிற்கும் மகனைக் கண்டதும் எனக்குள் வெட்கம் ஏற்பட்டது. அவன் கண்களில் பிரமிப்பு தெரிந்தது.

'அம்மாவா இப்படி? எப்போதும் ராணுவ அதிகாரி போல கண்டிப்புடன் வளைய வரும் அம்மாவா இப்படி தட்டாமாலை சுற்றி விளையாடுகிறாள்?'

அவன் முகத்தில் தெரிந்த கேள்வி புரிய, சமாளித்தபடி அதட்டினேன்.

"சரி, சரி வாங்க. காப்பியே குடிக்கலே இன்னும். எல்லாம் இந்தக் கழுதையாலே வந்தது."

படி இறங்க ஆரம்பித்தேன்.

"நாம ரெண்டு பேரும் தட்டாமாலை விளையாடலாமா?"

வித்யா கேட்பது காதில் விழுந்தது.

"ஸ், அம்மா."

அவன் பயந்த குரலில் சொல்வதும் கேட்டது.

**மா**லை பள்ளியிலிருந்து வீட்டுக்குத் திரும்பியதுமே வித்யாவைத் தேடின கண்கள். ஹாலில் அந்த போட்டோ கண்ணில் பட்டது.

நானும், அவரும் சேர்ந்து நிற்கும் போட்டோ. இவன் ஏழு வயதுக் குழந்தையாயிருக்கும்போதே, விபத்தில் எங்களைப் பிரிந்து விட்ட அவரின் முகத்தைப் பார்த்ததுமே மனசுக்குள் அழுத்தம்.

"இந்த ஹாலுக்கே இப்பத்தான் அத்தை ஒரு கம்பீரம் கிடைச்சிருக்கு. மாமா முகத்துலதான் எப்படி ஒரு கனிவு! அட, உங்க முகத்துலே கூட புன்னகை. இருந்தாலும் அப்பக் கூட டீச்சர் கெட்டப்பை விடக் கூடாதுன்ற பிடிவாதம் முகத்துல தெரியுது."



"பாகவதர் கில்லாடியா, எப்படி?"
"கிழ்ஸ்தாயியில் பாடறதா காட்டிக்கிட்டு நடுநடுவிலே அஞ்சு பத்து நிமிஷம் ரெஸ்ட் எடுத்துக்கறார் பாரேன்!"
– வெ. ராஜாராமன்

"எதுக்கு மாட்டினே நீ? அதிகப்பிரசங்கித்தன வேலை இது."

என் அதட்டல் கண்டு சுருங்கிப் போன முகத்துடன் அருகில் வந்தாள்.

"உங்களுக்குப் பிடிக்கலேன்னா வேண்டாம் அத்தை. என் ஆசைக்காக ஒரு ரெண்டு நாள் இங்கே இருக்கட்டும். அப்புறம் எடுத்து உள்ளே வைச்சுடலாம். சரியா, ப்ளீஸ்."

அவள் 'ப்ளீஸ்' கேட்டு விட்டால் மறுக்க முடியாது. அதில் அப்படி ஒரு குழைவு, கெஞ்சல்.

**அ**ன்று இரவு வேலையெல்லாம் முடிந்து படுக்கப் போகும் போது போட்டோ கண்ணில் பட்டது.

மரச் சேரில் நான் அமர்ந்திருக்க, சேரின் கைப்பிடியில் அவர் ஸ்டைலாய் அமர்ந்திருந்தார். அன்று எங்கள் முதல் வருட மணநாள். அரக்கு நிற பட்டுப் புடை



## இசைக் கச்சேரியில் தேசிய கீதம்

**இசைக் கச்சேரிகளில் தேசிய கீதத்தைக் கேட்க முடியுமா? முடியும்; பாஸ்கரராஜனின் புல்லாங்குழல் கச்சேரியில்! இவர் தமது கச்சேரிகளை முடிக்கும்போதெல்லாம் தேசிய கீதத்தை வாசித்துத்தான் முடிக்கிறார். இது மட்டுமல்ல; இவர் மதுரையிலுள்ள பிரபல கண் மருத்துவர் என்பது கவனத்துக்குரிய இன்னொரு விஷயம்!**

**படம், தகவல்: விஜயா கண்ணன்**

வையில், கை அகல ஜரிகை. போட்டோவில் நிறம் தெரியாவிட்டால் என்ன? மனசில் இருக்கிறதே. எப்படிப் பெருமையாய் இருந்தது. அதோ போட்டோவிலேயே தெரிகிறதே என் முகப் பூரிப்பு. 'அதெப்படி புருஷனுக்கு சமதையா உட்காரப் போயிற்று' என்று போட்டோவைப் பார்த்த மாமியார் குதித்தது ஞாபகத்துக்கு வந்தது.

"செல்லம்மா!"

விதிர்விதிர்த்துப் போய் நின்றேன். அவர் குரல்தான்! இப்படித்தான் கனிவு வழிய அழைப்பார். அதுவும் தனியாய் இருக்கும் போதுதான். கூட்டுக் குடும்ப கூடு அப்படி.

மனசுக்குள் ததும்பி வழிந்த பழைய நினைவுகளின் சிலிர்ப்பில் இரவு முழுவதும் கரைந்து நின்றேன்.

துக்கமாகவா உள்ளது? இல்லையே! வித்யா சொன்னது சரிதான்.

நினைவுகள் எப்போதும் நினைவுகள் தான். அதற்கு சந்தோஷ முகமோ, துக்க முகமோ கொடுப்பது மனசுதான்.

எப்போது தூங்கினேனோ தெரியாது. காலையில் கண் விழிக்கும் போது மணி ஏழு. நேரமாகி விட்ட பரபரப்பில் ஹாலுக்கு வந்தேன்.

வித்யாவின் அறையில் குரல் கேட்டது.

"அத்தையை ஏன் எப்பவும் டீச்சராகவே பார்க்கறீங்க. அம்மாவாய்ப் பாருங்க. பயம் வராது."

"வேண்டாம் வித்யா. அம்மாவுக்கு இது கோபம் தரும்."

வித்யா சொல்வதும் சரிதானோ? நானும் என்னை இத்தனை நாள் டீச்சராய் மட்டுமே நினைத்துக் கொண்டிருக்கிறேனோ?

வித்யா விடுவிடுவென்று வெளியே வந்தாள்.

"அத்தை எங்களை ஆசீர்வாதம் பண்ணுங்க."

இருவரும் விழுந்து வணங்கினர். வித்யா சட்டென என்னை உயரத் தூக்க, பயந்து விட்டேன்.

"என்ன இது?"

"பர்த் டே பேபியை தூக்கித்தான் கொஞ்சுவாங்க."

கன்னத்தில் முத்தம் தந்தவளை ஆச்சரியமாய்ப் பார்த்தேன்.

"இன்னிக்கு உங்க பிறந்த நாள். என்ன முழிக்கறீங்க. என்னங்க நீங்களும் சும்மா நிக்கறீங்க. அந்தப் பரிசை எடுத்துத் தாங்க."

பையிலிருந்து தயங்கியபடி என் மகன் எடுத்து வித்யாவிடம் தர, புது உடையை விரித்து என் மேல் வைத்து அழகு பார்த்தாள்.

"இந்த நைட்டி உங்களுக்கு அம்சமாய் இருக்கு அத்தை."

நைட்டியா? எனக்கா?

"ஏய் வாலு, உன் குறும்புக்கு அளவே இல்லை?"

செல்லமாய் அவள் முதுகில் அடித்தேன்.

"நீயே போட்டுக்க. என் பிறந்த நாளுக்கு உனக்குப் பரிசு தரேன்."

**ப**ள்ளியில் ஆசிரியர் அறையில் அமர்ந்திருக்கும் போது சிரிப்பு வந்து விட்டது.

"இப்பல்லாம் டீச்சர் முகத்துல அடிக்கடி சிரிப்பைப் பார்க்க முடியுது."

கலைச்செல்வி டீச்சர் கேட்கவும் 'நைட்டி' பற்றிச் சொன்னேன்.

"சொல்ல முடியாது. உங்களுக்கு மாட்டி விட்டாலும் விட்டுடுவா நைட்டியை. குறும்புக்காரப் பொண்ணு."

கலைச் செல்வி டீச்சர் சொன்னதும் உண்மையாகி விடுமோ என்று தோன்றியது.

முப்பத்திரண்டு வயசு வரை காத்திராமல் என் மகனுக்கு இன்னும் முன்னதாகவே திருமணம் செய்து வைக்காமல் போய் விட்டேனே என்று நினைத்துக் கொண்டேன். ◎



## இவர்கள்



## போட்ட



## கண்டிஷன்!

பிரபல டி.வி. செய்தியாளரான கரன் தாபர், சமீபத்திய மத்திய பட்ஜெட்டை ஒட்டி மத்திய நிதியமைச்சர் யஷ்வந்த் சின்ஹா, மற்றும் முன்னாள் நிதியமைச்சர்கள் மன்மோகன் சிங், சிதம்பரம் மூன்று பேரும் இடம் பெறும் நேரடி ஒளிபரப்பு விவாத நிகழ்ச்சி ஒன்றை நடத்தத்திட்டமிட்டு, அதற்கான முயற்சியில் இறங்கினார். அதை ஒளிபரப்ப பல்வேறு டெலிவிஷன் சானல்களும் தயாராக இருந்தாலும், மூவரும் போட்ட கண்டிஷன்களால் நிகழ்ச்சியை நடத்த முடியாமல் போய் விட்டது.

சின்ஹா, தமது அரசியல் எதிர் அணியினருடன் ஒரே நிகழ்ச்சியில் தோன்றுவதற்கு ஒப்புக் கொள்ளவில்லை.

''முன் கூட்டியே கேள்விகளைக் கொடுத்து விட வேண்டும். நிகழ்ச்சியில், கூடுதலான துணைக் கேள்விகள் கேட்கக் கூடாது!'' என்று கண்டிஷன் போட்டார் ப. சிதம்பரம்.

மன்மோகன் சிங், ''எனக்குத் தனிப்பட்ட முறையில் எந்த ஆட்சேபணையுமில்லை என்றாலும், காங்கிரஸ் கட்சி, பட்ஜெட்டை கடுமையாய் விமர்சிக்க விரும்புகிறது. எனவே நான் என்ன செய்ய? எனவே மன்னித்து விடுங்கள்!'' என்று சொல்லிவிட்டார்.

– சி.எம்.

சொந்தமா சிந்தியுங்க. கேரளத்துக்கு வெளியிலயும் உலகம் இருக்குங்கற உணர்வோட...''

''நான் போகட்டுமா? நேரம் ரொம்ப ஆய்ப்போச்சு! எனக்குப் பசி வேற.''

''போங்க... பசி, பிரத்தியேகமா ஒருத்தருக்கும் மட்டும் இல்லியே.''

தேவி போனாள்.

இனி அவளோடு பேசுவதில்லை என்று முடிவு செய்தேன். சுத்த முட்டாள்... துளிக் கூட அறிவில்லை. கலையைப் பற்றிப் பேச வந்து விட்டாள்... கலை... அம்மாடி!

கலையைப் பற்றி நான் மிகவும் சிந்தித்ததுண்டு. கொஞ்சம் வாசித்ததுமுண்டு. மறுபடியும் நிறைய சிந்தித்திருக்கிறேன். சித்திரங்கள்... சிலைகள், நாட்டியம், சங்கீதம், இலக்கியம் இப்படி ஒரு நாலைந்தாயிரம் ஆண்டுகளோடு நான் சிந்தித்தேன்.

மனிதன் ஏன் கலா சிருஷ்டி செய்கிறான்?

கலை.. இந்த இரண்டு எழுத்துகளுக்குள்ளே எல்லாம் உண்டு. சர்வ லோகங்களும்... எது கலை?

நான் ஒரு கதை எழுதிக் கொண்டிருந்தேன். தேவி நினைப்பு என்னை மிகவும் தொல்லைப் படுத்திற்று.

அந்த வீட்டிலிருந்து கண்ணுக்குத் தெரியாத ஒரு கிரணம் வந்து என் இருதயத்தை முத்தமிட்டு எனக்குள் ஒரு கலக்கத்தை ஏற்படுத்துவது போல. சிந்தனை அலைகள்!

நான் சரஸ்வதி தேவியைக் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினேன். ரகசியமாகத்தான்! கட்டடத்தின் மேல் மாடியில் ஜன்னல் சந்தின் ஊடே நான் பார்ப்பேன். மணிக்கணக்காக அப்படி நிற்பேன்.

தேவி துக்கத்தின் அவதாரம் என்பது போல உட்காருகிறாள், நடக்கிறாள், வாசிக்கிறாள், இடையிடையே நான் குடியிருக்கிற வீட்டைப் பார்க்கிறாள்.

அவளுக்கு வேண்டியது என்ன?

தேவியைப் பார்க்க நேரிட்டால் நான் பேசுவதில்லை. ஏதாவது கேட்டாள் என்றால் இரண்டு எழுத்து வார்த்தைகளில்தான் பதில் சொன்னேன். நான் சிரிப்பதில்லை. இப்படிச் சில நாட்கள் போயின.

ஒரு நாள் அவளுடைய வேலைக்காரன் கொஞ்சம் நேந்திரம் பழங்கள் புழுங்கியதும், புழுங்காததும் எனக்காகக் கொண்டு வந்து தந்தான். நான் வாங்கி வைத்தேன். தின்னவில்லை. பகல் முழுவதும் அப்படியே வைத்திருந்தேன். யார் கொடுத்து அனுப்பியது என்று நான் கேட்கவில்லை. எனக்குத் தெரிந்திருந்தது. அவற்றை மாலையில் நான் புழக்கடையில் வீசி எறிந்தேன்.

அடுத்த நாள் வேலைக்காரப் பையன் வந்தான். சின்னம்மாவுக்கு வாசிக்க நல்ல புத்தகம் கொடுக்கச் சொல்லி. நான் சிலதைக் கொடுத்தேன்.

அவற்றை திருப்பிக் கொண்டு வந்தபோது எல்லாவற்றுக்கும் நல்ல வெள்ளை அட்டை போட்டிருந்தது. நான் அதையெல்லாம் – அட்டை போட்டிருந்த காகிதத்தை எல்லாம் – பிரித்து ஜன்னலுக்குப் பின்புறம் வீசி விட்

டேன்.

நான் அந்த வீட்டைப் பார்ப்பதையே நிறுத்தினேன். தற்செயலாக தேவியைப் பார்க்க நேரிட்டால் முகம் திருப்பிக் கொள்வேன்.

இப்படி இருக்கையில் இரண்டு முக்கிய நிகழ்ச்சிகள்! ஒன்று நான் எழுதிய நூல்களை எல்லாம் தேவிக்கு அன்பளிப்பு செய்தது. மேலும் வாசிக்கப் புத்தகங்கள் கொடுக்கும்படி பையன் வந்து கேட்டதால் - நான் எழுதிய புத்தகங்களைக் கேட்கவில்லை. இருந்தாலும் என்னுடையவற்றை நான் சரஸ்வதி தேவியுடைய பேர் எழுதிக் கொடுத்தனுப்பினேன்.

பத்து நிமிடம் ஆகவில்லை. தேவி என் முன்னால்! அவளை வாரித் தழுவி முத்தமிட்டு ஆயிரமாயிரம் ஆறுதல் வார்த்தைகள் சொல்லத் தோன்றியது. அவள் ஒரு மாதிரி கோபத்தோடு தான் என்கிற மாதிரி மெதுவாய்க் கேட்டாள்.

"எதுக்காக எனக்குப் புத்தகங்கள் அன்பளிப்பாக் கொடுத்து அனுப்பிச்சீங்க? நான் பணம் குடுத்துடறேன்."

எனக்கு ஆத்திரம் வந்தது.

"நான் தந்தது அன்பளிப்பு. விலைக்கு இல்லே."

"நீங்க புத்தகங்களாலதானே வாழ்க்கை நடத்தறீங்க? எல்லாருக்கும் இப்படி சும்மா கொடுத்திட்டிருந்தா? நான் விலை குடுத்திடறேன். எங்கிட்டே பணம் இருக்கு."

ஓஹோ... பணக்காரி இல்லையா? சீமான் மகள்! விலை கொடுத்து விடலாம் என்று தோன்றியிருக்கிறது. நோட்டாக இருந்தால் தீக்குச்சி கிழித்துக் கொளுத்திவிட வேண்டும். ரூபாய் நாணயங்களானால் வீசித் தூர எறிய வேண்டும்! நான் சொன்னேன்.

"விலை கிடைக்கும்னு நெனச்சுத் தந்ததில்லே."

"இப்படி எல்லாருக்கும் குடுப்பீங்களா?"

"இல்லே."

"பின்னே எனக்கு?"

பிரத்தியேகமாக ஏதாவது உண்டா என்பதுதான் கேள்வி.

"சும்மா தந்தேன். என் இஷ்டம். தெரிஞ்சவங்களுக்கெல்லாம்."

"ஓ... அப்படியா விஷயம்?"

பெண்ணுக்கு என்னவோ போலாகி விட்டது. நின்று துள்ளப் போகிறாளா? என்ன ஒரு பாவம். மார்பு விம்மி நிற்கிறது. பெண்ணின் மணம்! நான் சொன்னேன்.

"எப்படி வேணும்னாலும் நெனச்சுக்குங்க."

"இதிலே போட்டிருக்கிற மத்த புஸ்தகங்கள் எங்கே?"

அந்தப் புத்தகங்களைச் சரிப்படுத்தத்தான் அங்கே நான் குடி வந்தது.

"உடனே வரும்."

"அதெல்லாம் வாசிக்கணும்னு எனக்கு ஒரு பதைப்பு."

"வந்ததுமே சூடா ஒரு பிரதி தர்றேன். மறக்க மாட்டேன்!"

"எங்க காலேஜிலே வந்து ஒரு சொற்பொழிவு பண்ணுவீங்களா? நான் அதுக்கு ஏற்பாடு பண்றேன்."

"நான் சொற்பொழிவு செய்யறதில்லே. எனக்குப் பேச வேண்டியதை எல்லாம் கதைகளிலேயே பேசுவேன்."




"இருந்தாலும் வந்து ஒரு சொற்பொழிவு செய்யக் கூடாதா?"

"முடியாது. உடம்பு சுகமில்லே."

"என்ன உடம்புக்கு?"

"வயசாச்சே... நெறய..."

"என்ன வயசு?"

"முப்பத்தி நாலு."

அப்புறம் தேவி போய்விட்டாள். நான் மாடியேறி ஜன்னல் இடுக்கின் வழியே பார்த்தேன். அவள் போய் நாற்காலியில் அமர்ந்து மேஜை மீது முகம் வைத்து என் அறையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். துயரம் நிறைந்த பார்வை.

சரஸ்வதி தேவியின் இதயத்தில் இருப்பது என்ன?

துயரின் இனிமை கவிந்த மோகன காவியமே, என்ன? அது என்ன?

(தொடரும்)

● இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.

*? ஜெயலலிதா வழக்குகளிலிருந்து விடுபட்டு விரைவில் கம்பீரமாக உலா வருவார் என்று காளிமுத்து கூறியுள்ளாரே?*

! மத்தியில் பி.ஜே.பி இருக்கும் போது என்ன கவலை? என்ன அநியாயம் வேண்டுமானாலும் நடக்கலாம்!

● மங்கை, பாளையங்கோட்டை.

*? அரசின் செலவுகளைக் கட்டுப்படுத்த ஒரு கமிஷனாமே?*

! எப்படிக் கட்டுப்படுத்தலாம் என்று ஆராய ஒரு கமிஷன், அப்புறம் அக்கமிஷனின் யோசனைகளை எப்படி அமுல்படுத்தலாம் என்பதற்கு இன்னொரு கமிஷன்... இப்படியே கமிஷனுக்குக் கமிஷன் போட்டுக் கொண்டே போகலாம். அத்தனை கமிஷன் முடிவுகளும் தூசிப் போர்வை போர்த்திக் கொண்டு தூங்கலாம்.

● ராஜி. கமுதி.

*? நூற்றுக் கணக்கான கோடி ரூபாய் மக்கள் பணத்தைச் சுருட்டிக் கொண்டு ஜம்பமாக அரசியல் புரியும் லாலு ஜோடி, தோழிகள் இருவர் – இவர்களுக்குத் தண்டனை கிடைக்காது போலிருக்கிறதே?*

! சட்டப்படி தண்டனை கிடைக்கத் தாமதமாகலாம். தண்டனை கிடைக்காமலும் போகலாம். ஆனால், வாக்காளர்களுக்கு நீதியை நிலைநாட்ட ஒரு வாய்ப்புத் தரப்படும்போது அவர்களாவது விழிப்புடன் செயல்பட வேண்டும்.

● ப. கந்தசாமி, திருச்செங்கோடு.

*? ஏதேதோ தில்லுமுல்லுகள் செய்து ஒரு நாள் சு. சுவாமி இந்தியப் பிரதமராகி விட்டதாகக் கனவு கண்டேன். கனவு பலிக்குமா?*

! இப்படியெல்லாம் துர்ச்சொப்பனம் வராமலிருக்க தினமும் தூங்குவதற்கு முன்னால் அரை மணி வாக்கிங் போங்க... அப்புறம் 'ஓம் சாந்தி' என்று நிதானமாக ஜபித்துக் கொண்டே தூங்குங்கள்.

● என். பாலகிருஷ்ணன், மதுரை - 1.

*? தங்கம் டிபாசிட் திட்டம் – தராசுவின் கருத்து என்ன?*

! தோல்வியடையப் போகும் திட்டங்களுள் ஒன்று. அரசுப் பத்திரங்களிலும் பிற முதலீடுகளிலும் நம்பிக்கை வைப்பவன் எதற்கு தங்கம் வாங்கி காக்கப் போகிறான்?

● பா. அச்சுதன், சென்னை - 35.

*? சமீபத்தில் தங்களைச் சங்கடப்படுத்திய சம்பவம்?*

! இந்திய விமானப்படை விமானத்துக்கு நேர்ந்த கோர விபத்து; சம்பந்தமில்லாதவர்கள் சிலரும் அதில் மாண்டது.

● எம். காமராஜ், பிச்சாண்டார் கோயில்.

*? கல்கி நூற்றாண்டு விழா நிகழ்ச்சிகளைத் தொகுப்பாகக் கொண்ட நூல் ஒன்றை வெளியிட்டு என் போன்ற நேயர்களின் ஆவலைப் பூர்த்தி செய்வீர்களா?*

! நூற்றாண்டு விழா மலர் வெளிவரப் போகிறது. அது வேறு பல ஆசைகளையும் பூர்த்தி செய்யும் வகையில் அமைந்திருக்கும்.

● ச. தங்கமணி, சத்திரப்பட்டி.

*? சுப்பிரமணிய சுவாமியின் ஜனதா கட்சி – வாழப்பாடி ராமமூர்த்தியின் ராஜீவ் காங்கிரஸ் – ஒப்பிடுங்கள்?*

! வாழப்பாடி அமைச்சராக இருப்பதால் சு. சுவாமியை விட கொஞ்சமாவது அதிக உறுப்பினர்கள் இருப்பார்கள் என்று நம்பலாம்.

• துர்ச்சொப்பனம்!



● ஆர். சாலமோன், ஆலங்குளம்.

*? ஹிந்துக்கள் குடும்பக் கட்டுப்பாடு செய்யலாகாது என ராமகோபலன் கூறுவது சரிதானா?*

! பிதற்றல்!

● எம். உமாபதி, சோழபுரம் ❑

*? ஸ்டெர்லைட் ஆலையை (தூத்துக்குடி) மூடவேண்டும் என்று வைகோ*



• தைரியக் கணக்கு!

தமிழக அரசைக் கேட்டுக்கொண்டிருக்கிறாரே?

! ஸ்டெர்லைட் ஆலை சுற்றுப்புறச் சூழலையும் மக்களின் ஆரோக்கியத்தையும் பாதிக்கக் கூடிய ஆலை என்பதை ஒப்புக் கொள்ளத் தான் வேண்டும். அது அமைந்துள்ள இடம் சரியானதல்ல என்றும் பு கிறது. இப்போது, காலம் கடந்து அந்தத் தவறைத்திருத்த முடியாது. ஆனால், பாதுகாப்பு அம்சங்களை இன்னும் தீவிரமாக்கி, ஆலை நிர்வாகிகளைக் கட்டுப்படுத்தி எச்சரிக்க முடியும். அதை அரசு செய்தாக வேண்டும். மூடுவிழா சுலபமான தீர்வாகலாம்; ஆனால் சரியானதல்ல.

• ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன் கோட்டை.

? தொகுதியைக் கோயிலாகவும் பெற்ற தாயாகவும் மதிக்க வேண்டுமென்று எம்.எல்.ஏக்களுக்கு துரைமுருகன் அறிவுரை வழங்கியுள்ளாரே?

! புல்லரிக்குது போங்க!

• பெ. பொன்ராஜபாண்டி, மதுரை - 10.

? அனைத்து முதியோருக்கும் அரிசி வழங்குவது சாத்தியமாகுமா?

! இது போன்ற வோட்டுப் பிடிக்கும் இலவசத் திட்டங்களை அறிவிப்பது எளிது; நியாயமான முறையில் அமுல்படுத்துவது கஷ்டம். முணுமுணுப்புகள்; புகார்கள்தான் அதிகம் ஒலிக்கும். ரேஷன் விநியோகத்தில் நாம் பார்க்காத ஊழல்களா!

• வி.பி. மகராசி, மதுரை.

? மீண்டும் பிரதமராவதற்காக தேவே கௌடா ஐம்பது லட்சம் ரூபாய் செலவில் யாகம் ஒன்றைச் செய்தது பற்றி?

! மக்களை நம்பாமல் இப்படி யாகத்தை நம்புபவர்கள் பதவிக்கு வந்தால் என்ன நடக்கும் என்பதை மக்கள்தான் புரிந்து கொள்ள வேண்டும்!

• க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்.

? தமிழகத்தில் வரும் நூற்றாண்டில் ம.தி.மு.க ஆட்சிக்கு வருவதை எவரும் தடுக்க முடியாது என்று வைகோ பேசியிருப்பது பற்றி?

! வரும் நூற்றாண்டு முடிய இன்னும் நூறு ஆண்டுகள் இருக்கிறதே என்பதால் தைரியமாகப் பேசியிருக்கிறார்!

• இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

? ஜெயிக்கப் போவது வாழப்பாடியாரா அல்லது 'ஜெ'வா?

! எதில்? அபத்தப் பேச்சிலா? அசட்டுத்தனமான அறிக்கைகளிலா?

• எம். சிவகுருநாதன், தஞ்சை.

? பகவத் கீதை போரைப் பற்றி போதிக்கும் புத்தகம் என்கிறாரே கலைஞர்... உங்கள் விளக்கம் என்ன?

! போரைப் பற்றிச் சொல்கிறது; அதைவிட வாழ்க்கைப் போரில் வெற்றி பெறுவது பற்றி அதிகம் பேசுகிறது.

• வி. ரெங்கநாதன், திருநெல்வேலி.

? கல்வி கற்க குழந்தைகளை அனுப்பாத பெற்றோருக்குத் தண்டனை அளிக்கும் வகையில் சட்டம் வரும் என்று அமைச்சர் அன்பழகன் அறிவித்துள்ளது பற்றி?

! வரதட்சணைத் தடைச் சட்டம் போல்தான் அது இயங்கும்.

• ச.ஆ. கேசவன், கு. கழுகாசலபுரம்.

? பொய் என்ற ஒன்று இல்லாவிட்டால் உண்மையின் சிறப்பை அறியமுடியாது தானே?

! தவறு! மிக மிகத் தவறு! உண்மை என்பது ஒப்பு நோக்குவதால் பிறப்பதல்ல; ஒப்பு நோக்குவதால் சிறப்பதும் அல்ல... சுய அழகும் சிறப்பும் உடையது. அதனால்தான் Truth is beauty; beauty truth — That is all yea know on earth and all yea need to know என்ற வாக்கியம் பிறந்தது.

• கூட்டு பேரம்... • ...ஆஹா! • நல்ல ஜோடி... • பெண்ணா?



• இடம் மாறிய நம்பிக்கை!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர்:
எம். உமாபதி,
சன்னதித் தெரு,
சோழபுரம் - 612 503.



# "என் போராட்டம்"

**பதின்மூன்று வயதில் விடுதலைப் போராட்டத்தில் மேடையேறிய 'தமிழக ஜனதா' தலைவர் நெல்லை ஜெபமணிக்கு சமீபத்தில் 80 வயது நிறைவு பெற்றது. அவரது நினைவுக் கீற்றுகளிலிருந்து....**

தாமிரபரணிக் கரையிலுள்ள 'குரங்கணி' என்ற கிராமத்தில் பிறந்தேன். அப்பா சங்கர நாடாருக்கு ஊரில் ஏக மரியாதை. எந்த விஷயமென்றாலும் ஆலோசனைக்கு அப்பாவிடம் வந்து விடுவார்கள்.

ஊரில் உள்ள திண்ணைப் பள்ளிக் கூடத்திலேயே ஐந்தாம் வகுப்பு வரை படித்தேன்.

ஆற்றுக்கு அந்தப் பக்கம் ஏரல் என்றொரு கிராமம். அங்குள்ள கதர்க் கடையில் அழகர்சாமி நாயுடு என்பவர் மானேஜராக இருந்தார். அவர் தீவிர தேச பக்தர். அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வருவார். "என்று தணியும் இந்த சுதந்திர தாகம், ஏழையென்றும் அடிமையென்றும் எவரும் இல்லை ஜாதியில்", "வெள்ளைத் தாமரைப் பூவில் இருப்பாள்" என்று பாரதியின் பாடல்களைச் சொல்லிக் கொடுப்பார். நான் என்னொத்த வயதுப் பையன்களை அணி சேர்த்துக் கொண்டு, பாரதி பாடல்களைப் பாடியபடி ஊரை வலம் வருவேன். என்னுள் தேசபக்தியை ஊட்டியதில் அழகர்சாமி நாயுடுவுக்கு மிகுந்த பங்குண்டு.

ஆறாம் வகுப்பு படிப்பதற்காக அருகிலுள்ள 'மாவடு பண்ணை' என்ற ஊரில் உள்ள பள்ளியில் சேர்த்தார்கள். ஏழாவது படித்துக் கொண்டிருக்கும்போதுதான் அந்தச் சம்பவம் நடந்தது. பக்கத்திலிருந்த தென் திருப்பேரை என்ற ஊரில் இருந்து கதர்த் துணி விற்பனைக்காகச் சிலர் வந்திருந்தார்கள். எங்கள் வீட்டில்தான் தங்கியிருந்தார்கள். அன்று மாலை ஊரில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. அந்தக் கூட்டத்தில்தான் முதன் முதலாக நான் மேடையேறினேன். ஜாலியன் வாலாபாக் படுகொலை பற்றி உணர்ச்சி

பூர்வமாகப் பேசினேன். 'பையன் பிரமாதமாகப் பேசறானே' என்று ஊரே புகழ்ந்தது. அப்புறம் என்ன? சுற்று வட்டாரத்திலிருந்து பேச அழைப்பு வந்து கொண்டே இருந்தது. மகாத்மாவின் பெருமைகளையும் நாடு சுதந்தரம் அடைய வேண்டியதன் அவசியத்தையும் எழுச்சியுடன் நான் விளக்குவதைக் கேட்க நல்ல கூட்டம் சேரும்.

அந்தச் சூழ்நிலையில் எங்கள் குடும்பத்தில் பெரும் மாற்றம் ஒன்று நடந்தது. தெற்குப் பக்கத்தில் எல்லா கிராமங்களிலும் பரவலாக கிறிஸ்துவ சமயத்திற்கு மக்கள் மாறிக் கொண்டிருந்த காலம் அது. அப்பாவும் மாறிவிட்டார்! சங்கர நாடார், ஞான ஒளி ரத்தினசாமியாக மாறினார். எனக்கு நைனார் என்று தாத்தாவின் பெயரை வைத்திருந்தார்கள்.

# "ஓயாது!"

அதை மாற்றி ஜெபமணி என்று ஞானஸ்தானம் செய்தார்கள். அப்பா மதம் மாறியதில் ஊரில் எல்லோருக்கும் கொஞ்சம் வருத்தம்தான். ஆனால் மிக்க மரியாதை பெற்றவராக இருந்ததால், யாரும் நேரிடையாகக் கேட்கத் துணியவில்லை. ஊரில் மாதா கோயில் கட்டத் துவங்கினார் அப்பா.

வளமாக இருந்த எங்கள் குடும்பம், கொஞ்சம் வறுமைச் சூழலுக்கு தள்ளப்பட்டது. நான் கொழும்புக்குச் சென்றேன். அங்கு உள்ள நாட்டுக் கோட்டைச் செட்டியார் மளிகைக் கடையில் வேலை செய்தேன். அங்கும் வெள்ளையனை எதிர்க்கும் என் பிரசாரம் தொடர்ந்தது. என் அண்ணன் ஒருவர் சென்னை ராயப்பேட்டையில் பெட்டிக்கடை வைத்திருந்தார். கொழும்புவிலிருந்து நேராக சென்னை வந்தேன். கடையில் வேலைக்குச் சேர்ந்தேன்.

**1941**ம் வருடம் பத்திரிகைகளில் ஒரு விளம்பரம் பார்த்தேன். திருப்பூரிலுள்ள ஜமுனாலால் பஜாஜ் வித்தியாலயத்தில் காந்தியடிகளின் நிர்மாணத் திட்டத்தில் பயிற்சி பெற இளைஞர்கள் தேவை என்றது விளம்பரம். வித்யாலயத்தில் சேர்ந்து, நிர்மாணத் திட்ட பயிற்சி வகுப்பில் ஆர்வமாக ஈடுபட்டுக் கொண்டிருந்தேன். எனக்கு மட்டும், வித்யாலயத்தை விட்டு வெளியே சென்று பிரசாரம் செய்ய சிறப்பு அனுமதி வழங்கியிருந்தார்கள்.

அந்தக் காலகட்டத்தில்தான் தீரர் சத்தியமூர்த்தி மறைந்தார். அவரது பேச்சு ஊட்டிய சுதந்தரக் கனல் பல இளைஞர்களை தேசப் போராட்டத்தில் ஈடுபடுத்தியது. களத்தில் குதிக்க வேண்டிய காலம் வந்து விட்டது என்று முடிவுகட்டிக் கொண்டு முதல் முறையாக ஏழு பேருடன் திருப்பூர் கீழ்நிலை நீதிமன்றத்தின் முன் மறியல் செய்தேன்.

அதற்கு அடுத்த நாள் மாஜிஸ்திரேட் நீதிமன்ற மறியல். எங்களைப் பிடித்தது போலீஸ். இரண்டு நீதிமன்றங்களிலும் மறியல் செய்ததற்காக 28 மாதம் ஜெயிலில் தள்ளி விட்டார்கள்! அலிப்புரம் ஜெயிலில் இருந்த அந்தக் காலகட்டத்தை மறக்க முடியாது.

250 பேர் கொண்ட குழுவாக ஒவ்வொரு கொட்டடியிலும் அடைத்து வைத்திருந்தார்கள். தினமும் பக்திப் பாடல்கள், பிரசங்கம் என்று பொழுது நன்றாகவே போகும். இடையே கடுமையான வேலைகளும் உண்டு.

**வி**டுதலை பெற்று வந்தவுடன் திருப்பூர் கதர்க் கடையில் மானேஜராகச் சேர்ந்தேன். அதன் பின் திருநெல்வேலி கதர்க் கடைக்கு மாற்றம். அப்போதுதான் நாடு விடுதலை பெற்றது. நெல்லை டவுனில் உள்ள தேரடி அருகில் நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு மூவர்ணக் கொடியை ஏற்றினோம். பாரதியார் பேத்தி லலிதா பாரதி தேசபக்திப் பாடல்களைப் பாடினார். நெல்லையில் நான் கதர்க் கடையில் வேலை பார்த்துக் கொண்டிருக்கும்போதுதான் செல்லம்மாள் பாரதியுடன் அறிமுகம் ஏற்பட்டது. பாரதி ஒவ்வொரு பாடலையும், எந்தச் சூழ்நிலையில் உருவாக்கினார் என்று செல்லம்மாள் பாரதியின் மூலமே கேட்கும் பெரும் வாய்ப்பு கிடைத்தது!

அங்கிருந்தபோதுதான் எனக்கு திருமணம் நடந்தது. மனைவி பெயர் திருநாவுக்கரசி. பூச்செண்டு என்று அழைப்பார்கள். எனக்கு கதர் வேட்டி, அவளுக்கு இரண்டே

— நெல்லை ஜெபமணி

முக்கால் ரூபாயில் கதர்ப் புடைவை, கதர் மாலை என்று எளிமையான காந்தியத் திரு மணமாக அது நடந்தது. மைலாப்பூரில் பாத் திரக் கடை வைத்திருந்த ராமசாமி நாடாரின் தங்கைதான் பூச்செண்டு. என்னைத் திரு மணம் செய்து கொண்ட பின் சர்க்கா நூற் பதில் ஆர்வம் வந்து, சில ஆண்டுகளுக்கு முன்னால் இறக்கும் வரை கதர் நூற்றுக் கொண்டிருந்தாள் அவள்!

சுதந்தரம் பெற்ற பின்னர் கதர் வளர்ச்சிக் காக அரசு ஒரு துறையையே உருவாக்கியது சென்னைக்கு அருகிலுள்ள திருவள்ளூரில் அரசு கதர்க் கடையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தபோது, முதல்வர் குமாரசாமி ராஜா அந்த ஊருக்கு வந்திருந்தார். தமிழ்நாடு முழுவதும் நான் தேச விடுதலைப் பிரசாரம் செய்து வந்ததால் எல்லோருக்கும் என்னை நன்றாகத் தெரியும்! நான் மேடையை விட்டுத் தள்ளி தூரமாக உட்கார்ந்திருந்தேன். ராஜா என்னைப் பார்த்து விட்டார். "ஜெப மணி மாதிரி இருக்கே.. கூப்பிடுங்க. அவன் மேடையில் பேசட்டும்" என்று அழைக்கச் சொன்னார். மேடைக்குப் போனேன்.

"இந்த ஊர்ல என்னய்யா செய்துக்கிட்டு இருக்கிங்க? இனிமேதான் நமக்கு வேலை நிறையா இருக்கு! நாளைக்குப் போய் காமராஜரைப் பாரு" என்று அன்பு கலந்த கண் டிப்புடன் சொன்னார், குமாரசாமி ராஜா.

மறுநாள் காமராஜரைப் பார்த்தேன்.

"டேய் என்ன செஞ்சுட்டு இருக்கே? உடனே வேலையை விட்டுவிடு. இனிமே உனக்கு காங்கிரஸ் பிரசாரம்தான் வேலை" என்று அன்புக் கட்டளை போட்டு விட் டார்.

குக்கிராமம் முதற் கொண்டு பெரிய நகரம் வரை நான் பேசாத இடங்கள் இல்லை. ஆனால் கட்சிப் பெயரைப் பயன் படுத்தி எந்த ஒரு சலுகையும் நான் பெற்றது கிடையாது. என் மைத்துனர் ஒருமுறை, வீட்டு வசதி வாரிய இட ஒதுக்கீட்டுக்காக காமராஜரிடம் சிபாரிசு செய்யச் சொன் னார். அவருக்கு வருத்தம் உண்டாக்க வேண் டாமே என்று அழைத்துக் கொண்டு சென் றேன். ஹவுசிங் போர்டு தலைவரிடம் சொன் னார் பெருந்தலைவர். அப்போது அவர் காம ராஜரிடம் "ஜெபமணிக்கும் ஒன்று கொடுக்க லாமே!" என்றார். "அவன் வாங்கிக்க மாட் டான்" என்றார் காமராஜர்.

"என்னிடம் பணம் கிடையாது; வேண் டாம்" என்று மறுத்தேன். "சுலபத் தவணை யில் கட்டி விடலாம்" என்றார் வீட்டு வசதி வாரியத் தலைவர். எனக் கும் ஒதுக்கீடு செய்து விட் டார்கள். வீட்டிற்குத் தவணை கட்ட வேண்டும் என்பதையே நான் மறந்து விட்டேன். ஏகப்பட்ட

---

# இவர்களின் ஹீரோ!





• கவிதா



• ரீனா

**வெறும் மரங்களை ஓவிய மாக்கியே ஒரு கண் காட்சியை நடத்தினார்கள் கவிதாவும் ரீனாவும். மரங்கள் இவர்களின் ஹீரோவானது எப்படி?**

**"ஓவியர் ஏ.வி. இளங்கோவிடம் ஏழெட்டுப் பேர் ஓவியம் பயில்கிறோம். வாரத்தில் இரண்டு நாட்கள், ஐ.ஐ.டி. வளாகத்திலுள்ள மரங்கள் அடர்ந்த சூழ்நிலையில் தான் ஓவிய வகுப்புகள் நடக்கும். அப்போது தான் மரங்கள் எங்களை பாதித்துவிட்டன. அதோடு இன்றைய சுற்றுச் சூழல்வாதிகளின் கோஷமே 'மரங்களைக் காப்போம்' என்பதுதானே!" என்கின்றனர் அவர்கள்.**

**- சி.எம்.**

பாக்கி சேர்ந்து, வீடு ஏலத்துக்கு வந்து விட்டது! அந்த சமயம் நான் ஊரில் இல்லை. மாதர் காங்கிரஸார் சிலர் என் வீட்டுக்கு வந்திருந்தார்கள். அவர்கள் விஷயம் கேள்விப்பட்டு காமராஜரிடம் சொல்லியிருக்கிறார்கள்.

"நான் பணம் கொடுத்தால் அவன் வாங்க மாட்டான்" என்று அவர் அவர்களை அனுப்பி விட்டார். வெளியே வந்து நின்று கொண்டிருந்தார்கள். அப்போது அங்கு வந்த மணிவர்மாவிடம் சொல்லியிருக்கிறார்கள். மணிவர்மா காமராஜரிடம் கலந்து பேச, சோ ஒரு நாடகம் போட்டு நிதி வசூல் செய்து தர ஏற்பாடு செய்யப்பட்டது. இப்போது நான் இருக்கும் இந்த வீட்டை மீட்டுத் தந்தவர் 'சோ'தான்.

எமர்ஜென்ஸி கால கட்டத்தில் அதை எதிர்த்து கடுமையாக பிரசாரம் செய்தேன். என்னை நன்றாகத் தெரிந்து வைத்திருந்த காங்கிரஸ்காரர்களே என்னை சிறையில் அடைக்க ஏற்பாடு செய்தார்கள். பத்து மாத காலம் சிறைவாசம். ஜெயில் அதிகாரி அடித்ததில் காது செவிடாகிப் போனது. இன்று வரை ஒரு காது எனக்கு கேட்காது!

எமர்ஜென்ஸி முடிந்து 1977ம் வருடம் தேர்தல் வந்தபோது சாத்தான்குளம் தொகுதியில் போட்டியிட்டேன். என்னை எதிர்த்து நின்று தோற்றவர் என் உறவினரான சி.பா. ஆதித்தனார்தான்! சட்டமன்ற உறுப்பினராக இருந்தபோது எங்கு போவதென்றாலும் பஸ்ஸில்தான் போவேன்! என் மனைவி எம்.எல்.ஏ. மனைவி என்றெல்லாம் கௌரவம் பார்க்காமல் புல் அறுப்பது, சாணி தட்டுவது போன்ற வேலைகளையெல்லாம் செய்வாள். நிறைய பேர் பணக்கட்டுக்களுடன் பல சிபாரிசுகளுக்கு வருவார்கள். எனக்கு எந்த சபலமும் வராமல் பார்த்துக் கொண்டான் இறைவன்.

இப்போது தமிழக ஜனதா கட்சியை நடத்திக் கொண்டிருக்கிறேன். இது ஒன்றும் புதுக் கட்சியல்ல. 1977ல் தோற்றுவிக்கப்பட்ட ஜனதா கட்சியின் தொடர்ச்சிதான் இது. இப்போது இதில் லட்சக்கணக்கான தொண்டர்கள் இல்லை என்பது உண்மைதான். ஆனால் இருக்கும் நூற்றுக்கணக்கானவர்கள் நெருப்பைப் போன்றவர்கள். கருணாநிதியுடனும் ஜெயலலிதாவுடனும், கூட்டணி வைத்துக் கொண்டு காமராஜரின் ஆட்சியை ஒரு போதும் கொண்டு வர முடியாது! பதின்மூன்று வயதில் எந்த ஆவேசத்தோடு மேடையேறினேனோ, அதே ஆவேசம்தான் இன்று வரை தொடர்கிறது. வெற்றி தோல்வியைப் பற்றிக் கவலைப்படாமல் மதவாதிகளுக்கும் ஊழல் பேர்வழிகளுக்கும் எதிரான என் போராட்டம் தொடரும்!

சந்திப்பு : ஸ்ரீநிவாசன்

## "வருத்தப்படச் செய்து விட்டார் பார்த்திபன்!"

"மதுரையிலுள்ள எங்கள் ஸ்ரீதேவி தியேட்டரைத்தான் வாடகைக்கு எடுத்து, 'பாரத் தியேட்டர்' என்று பெயரை மாற்றி 'ஹவுஸ்ஃபுல்' படம் எடுத்தார் பார்த்திபன். எங்களிடம் சொன்ன கதைப்படி தியேட்டரில் வெடி குண்டு வைக்கப்படுகிறது; அதிலிருந்து மக்களை எப்படிக் காப்பாற்றுகிறார்கள் என்பதுதான். ஆனால் படத்திலோ, எடுத்தவுடனேயே வெடி குண்டால் தியேட்டர் சிதறிக் கிடப்பது போல் காட்டப்படுகிறது. இது எங்களை சென்டிமென்டாக ரொம்பவே பாதித்து விட்டது. இப்படியொரு காட்சியை அவர் சென்னையில் செட் போட்டு எடுத்திருந்தாலும் எங்களிடம் அது பற்றிச் சொல்லாமல் இருந்து விட்ட பார்த்திபன் மேல் எங்களுக்கு ரொம்பவும் வருத்தம்!" என்கிறார் சம்பந்தப்பட்ட தியேட்டரின் உரிமையாளரான ராமகிருஷ்ணன்.



படம், செய்தி : விஜயா கண்ணன்

**வெளிப்படையாகக் காங்கிரசுக்கு அழைப்பு விடுத்து, சோனியா காந்தியை ஆட்சி அமைக்கக் கோரி ஜோதி பாசு வாரா வாரம் அறிக்கை விடுவது, இடது சாரிகளில் பலருக்குப் பிடிக்க வில்லைதான். ஆனால், பிறகு எப்படித்தான் பா.ஜ.க. ஆட்சியைக் கீழே இறக்கி, ஜோதி பாசுவைச் சமாதானப்படுத்துவது? நம் கற்பனையில், அவர்களுக்கிடையே ஒரு கலந்துரையாடல் :**

# சோனியா, மூன்றாவது அணியா?

**நாயனார் :** சந்திரபாபு நாயுடு இப்படி முட்டாள்தனமா நடந்துக்கிட்டு பா.ஜ.க .வைத் தொடர்ந்து ஆதரிச்சா, நீங்க நினைக்கிற மாதிரி ஆட்சி தானா கவிழுவே வாய்ப்பு இல்லே!

**சுர்ஜித் :** ஐ.மு. ஆட்சியிலயும் அவர்தான் லைம் லைட்டுல இருந்தார். இப்பவும் அவர் தான். வேணும்னா நான் ஹைதராபாத் போய், பார்த்த ஞாபகம் இல்லை யோன்னு கேட்டு வைக் கட்டுமா?

**ஜோதி பாசு :** நீங்க கொஞ்சம் சும்மா இருக்கிங் களா? ஏற்கெனவே உங்களுக்கு ஐ.மு. ஆட்சியில ரொம்ப நல்ல பேரு! யாரையும் சுதந்தரமா இயங்க விடாம பண்ணறீங்கன்னு, ஒருத்தர் பாக்கி இல்லாம எல்லாரும் உங்களைச் சொல்லியாச்சு. மறுபடி அட்வைஸ் பண் றேன் பேர் வழின்னு கிளம்பிடாதீங்க!

**நாயனார் :** உங்களுக்கே பி.எம். ஆகிற சான்ஸ் வந்தும், வேணாம்னு உட்டீங்க. அப்ப நீங்க 'யெஸ்'னு சொல்லியிருந்தா, இப்ப பா.ஜ.க. பதவிக்கு வந்திருக்குமா?

**ஜோதி பாசு :** அதுக்குக் காரணமே சுர்ஜித்தான்னு எல்லாருக்கும் தெரியும். சரி... பழசு போகட்டும். மூணாவது அணி அமைக் கிற ஐடியா இருக்கா? காங்கிரஸ் அதுல உண்டா? யோசியுங்க.

**நாயனார் :** காங்கிரசை ஏன் மூணாவது அணியில சேர்த்துக்கணும்? ஏற்கெனவே இங்க அந்தோணி பிடுங்கலும், கருணாகரன் தொந்தரவும் தாங்க முடியல்லே.

**சுர்ஜித் :** அப்ப ஒண்ணு பண்ணுவோம். பழைய ஐக்கிய முன்னணிக் கட்சிகள் எல்லாத்தையும் கூப்பிடுவோம். பழையபடி ஜனதாதள், தி.மு.க., த.மா.கா. எல்லாரையும் சேர்த்துத் தலையை எண்ணுவோம்.

**நாயனார் :** எண்ணி?

**சுர்ஜித் :** குறைஞ்சதுன்னா காங்கிரசை யும் சேர்த்துப்போம். அப்புறம் பா.ஜ.க.வை ஒரே இழு இழுத்துக் கீழே தள்ளிடுவோம்.

**ஜோதி பாசு :** முன்னால நீங்க கணக்கை ஒழுங்காக் கத்துக்குங்க. கட்சியை அப்புறம் நடத்தலாம். அ.தி.மு.க.வுல பதினெட்டு எம்.பி.ங்க இருக்காங்க. அதையும் இழுத்தாத் தான் காரியம் நடக்கும். புரிஞ்சுக்குங்க.

**சுர்ஜித் :** *(எழுந்து கொண்டே)* நான் வேணா போயஸ் கார்டன் போய்ப் பேசிப் பார்க்கட்டுமா?

**நாயனார் :** *(அவர் கையைப் பிடித்து இழுத்து)* சும்மா உக்காருங்க. நீங்க எல்லாரை யும் பார்த்துப் பேசிப் பேசித்தான் ஐ.மு.வே உடைஞ்சது. உங்க ராசியே அப்பிடி! ஒரு இடத்துல உட்கார்ந்ததில்லே...

**ஜோதி பாசு :** இந்த விஷயத்துல மட்டும் நான் நாயனாரை சப்போர்ட் பண்றேன்.

**சுர்ஜித் :** அப்ப, யாரானும் மெட்ராஸ் போய் அந்த அம்மாவைப் பார்க்க வேணாமா? அப்படியே திருணமூல் காங் கிரஸ் மம்தா பானர்ஜியையும்...



தடாலடியா முடிவு பண்ணி டுவாங்க! நம்ப மெனக்கெட்டு 10, ஜன்பத் வாசல்ல போய் ஜால்ரா அடிக்கறதுதான் மிச்சமாகும்.

**சுர்ஜித் :** அப்ப என்ன தான் பண்ணப் போறீங்க? *(மறுபடி கிளம்பி)* நான் வேணா போயஸ் கார்டனுக்குப் போய்ப் பேசிட்டு வந்தூட்டுமா...

**ஜோதி பாசு :** *(அவர் மேல் விழாத குறையாக அவரைப் பிடித்து)* ஐயோ, இந்த ஆள் இப்படி ஒவ்வொருத்தரையும் பார்க்கப் போறேன், பார்க்கப் போறேன்னு ஆலாப் பறக்கறாரே! ஒரு கயிறு இருந்தா இவரை நாற்காலியோட கட்டிப் போட்டுரலாம் போலிருக்கு.

**நாயனார் :** அது பெட்டர். ஏன்னா, இப்பத்தான் ஹைதராபாத் போய், கீழே விழுந்து காலையோ கையையோ முறிச்சுக்கிட்டார். இந்த வயசான காலத்துல எதுக்கு இவருக்கு இதெல்லாம்?

**சீதாராம் :** பாசு, இப்ப என்ன பா.ஜ.க. ஆட்சி போகணும். சோனியாவோட தலைமைல, மத்தியிலே காங்கிரஸ் ஆட்சி அமைக்கணும். அவ்வளவுதானே?

**ஜோதி பாசு :** இதையேதான் கூட்டம் ஆரம்பிச்ச போதும் சொன்னேன். இன்னும் எத்தனை தடவை அதையே சொல்றது? ஐயோ... யாரானும் சோனியா கிட்டப் போய்...

**சுர்ஜித் :** *(கிளம்பி)* நான் வேணும்னா போய், சோனியாவைப் பார்த்துப் பேசி...

**நாயனார் :** *(ஓடிப் போய் அவரைப் பிடித்து)* அடுத்த தடவை நீங்க கிளம்பினா ஜோதி பாசு சொன்ன மாதிரி ஒரு கயிறு கொண்டு வந்து நிச்சயமாக் கட்டிப் போட்டுடுவேன். ஜாக்கிரதை!

**சீதாராம் :** சோனியாவை சம்மதிக்க வைக்கிறதுக்கு முன்னாடி, பல குட்டி தேவதைகளை நாம் பார்த்தாகணும். அதுலயும் மாதவ் ராவ் சிந்தியா - அர்ஜுன் சிங்கைப்

**ஜோதி பாசு :** ஐயோ, யாரானும் இந்த ஆளைப் பிடிச்சு வெளியே அனுப்புங்களேன்! ஒரே அபசகுனமாப் பேசிட்டிருக்கார் ஆரம்பித்ததுலேருந்து. சோனியா காங்கிரஸ் அமைச்சரவை அமைக்க வழி பாருங்க. பா.ஜ.க. அட்டகாசம் தாங்க முடியல்லே!

**சீதாராம் யசூரி :** *(வந்து கொண்டே)* பாரதிய ஜனதா ஆளுவதற்கு தார்மீக உரிமை இல்லேன்னு சோனியா லக்னோ கூட்டத்துல, ஹரியானா கூட்டத்துல எல்லாம் பகிரங்கமா சொல்லியிருக்காங்க!

**சுர்ஜித் :** *அதுனால?*

**சீதாராம் :** அதுனால அவங்களை நம்ப முடியாதுங்கறேன். தார்மீக உரிமை இல்லாம வேணா ஆட்சி பண்ணட்டும்னு அவங்க

பார்த்துப் பேசினா மட்டும் போதாது. சரத்ப வாரைப் பார்க்கணும். அவரைப் பார்த்தா மட்டும் போதாது. குலாம் நபி ஆசாதைப் பார்க்கணும். அவரோட நிக்காம அகமது பட்டேலைப் பார்க்கணும். கடைசிலதான் சோனியா காந்தி பிரத்தியட்சமாவாங்க. நடக்கற காரியமா இது! அதுக்குள்ள பா.ஜ.க. வே தட்டுத் தடுமாறி அஞ்சு வருஷ ஆட்சியை முடிச்சுடும்.

**கர்ஜித் :** அதுக்குத்தான் நான் இப்பவே எல்லாரையும் பார்த்துப் பேசிட்டு வந்துர்றேன்னு...

*(ஜோதி பாசு, நாயனார், சீதாராம் யச்சூரி எல்லாரும் கும்பலாக அவர் மீது விழுந்து, சடுகுடு ஆட்டத்தில் ஆளை அமுக்குகிற மாதிரிப் பிடித்து இறுக்குகிறார்கள்)*

**நாயனார் :** நீங்க நாளைக்கே சோனியாவுக்கு ஒரு போன் கால் போட்டு நேரடியாப் பேசுங்க. தில்லிக்கு எப்ப வரட்டும், எப்பப் பேசலாம்னு கேளுங்க.

**கர்ஜித் :** நியூஸ் பேப்பர் மூலமா' இத்தனை தடவை சோனியா காந்திக்கு அழைப்பு விட்டுட்டார் பாசு. அந்த அம்மா துளிக்கூட மனசு இறங்கி, பா.ஜ.க. ஆட்சியைப் பதவியை விட்டு இறக்காம, பிடிவாதமா இருக்காங்கன்னா எவ்வளவு கல் நெஞ்சு பாருங்க. நீங்க அவங்களையே நம்பி, கெஞ்சிக்கிட்டிருக்கிறதுக்கு, பழையபடி மூணாவது அணி உருவாக்கற முயற்சில ஈடுபட்டு, மூப்பனாரை பி.எம்.ஆ போடறோம்னு சொன்னா, ஒரு வேளை ரோஷம் வந்து சோனியா உடனடியா களத்துல இறங்குவாங்க!

**ஜோதி பாசு :** அப்பாடா! இத்தனை பேசினதுல இப்பத்தான் உருப்படியா ஒரு யோசனை சொன்னீங்க. இப்போதைக்கு மூணாவது அணிய உருவாக்கறதுக்காவது வழியைப் பாருங்க.

**கர்ஜித் :** அப்போ நான் காஷ்மீர் போய் ஃபாருக் அப்துல்லாட்ட முதல்ல பேசி...

*(மறுபடி ஜோதி பாசு, சீதாராம் யச்சூரி, நாயனார் எல்லாருமாக அவரைக் குண்டுக்கட்டாகப் பிடிக்கிறார்கள்)*

**— சாருகேசி**

---

# சின்னத்திரையில் பார்த்தது!



- விமர்சிக்கிறார் குழந்தை நல மருத்துவர் டாக்டர் ஜெ. விஸ்வநாத்

● அகில உலக பெண்கள் தினத்தையொட்டி, ஞாயிறு 'கேள்வி நேரத்'தில் சிவசங்கரி, மைதிலி சிவராமன், திலகவதி ஆகியோர் சிறப்பு அழைப்பாளர்களாகப் பங்கேற்றனர். சத்துள்ள கருத்துக்கள் வந்தன என்றாலும் புதிய கோணம் என்று எதுவும் காணோம். மூன்றில் ஒரு பங்கு என்பது போன்ற சட்டத் திருத்தம் வந்தாலும் கூட அடிப்படை மனமாற்றம் இருந்தால்தான் எதையும் சாதிக்க முடியும் என்று தோன்றுகிறது.

● 'வணக்கம் தமிழகத்'தில் சிறப்பு விருந்தினராக இளம் கிரிக்கெட் வீரர் சடகோபன் ரமேஷ். அவரது வெகு இயல்பான பேச்சை ரசிக்க முடிந்தது. ''ஆளாளுக்கு அட்வைஸ் செய்வாங்க. அதையெல்லாம் கேட்டுக் கொள்வதில் தப்பில்லை. ஆனால் ஒவ்வொரு பந்தையும் எதிர் கொள்ளும்போது நானே யோசித்து ஒரு முடிவு எடுத்தால்தான் அது சரியாக இருக்கும்'' என்று அவர் கூறியது வாழ்க்கைக்கும் பொருந்தும்.

● 'சர்வோ டாப் டென்' நிகழ்ச்சியில் போக்குவரத்து சிக்கல்கள் பற்றிய கேள்விகள் கேட்கப்பட்டன. பங்கேற்றவர்கள் நிரந்தர டிரைவிங் லைசன்ஸ் வைத்திருப்பதாகக் கூறினாலும், அடிப்படை போக்குவரத்துக் கேள்விகளுக்குக் கூட அவர்களுக்கு பதில் தெரியவில்லை. 'தெரியாவிட்டாலும் பரவாயில்லை' என்று அவர்களுக்கும் பரிசு அளித்தது கொஞ்சமும் சரியில்லை.

● ''ஆண்டு விடுமுறையை எப்படிக் கழிக்கப் போகிறீர்கள்?'' என்று பல பள்ளிச் சிறுமிகளைக் கேட்டார்கள் ஒரு நிகழ்ச்சியில். ''ஆண்டுத் தேர்வு முடிந்த கையோடு அடுத்த வகுப்பு தொடங்கி விடுகிறது எங்களுக்கு. சில வாரங்களுக்குப் பிறகுதான் விடுமுறை.அப்போது செய்வதற்காக புதுப் பாடங்களிலிருந்து நிறைய ஹோம் வொர்க் தருகிறார்கள்'' என்று பலரும் நொந்து கொண்டார்கள். ஹோம் வொர்க்கில் தப்பில்லை, ஆனால் பாடங்களிலிருந்து அவை இருக்க வேண்டாமே, பொது அறிவு சம்பந்தப்பட்டதாக இருக்கலாமே.

● 'குடும்பம்' என்ற தொடரில் முதலிரவுக் காட்சி. சிம்பாலிக்காக காட்டக் கூடாதா? பால், பழம், கணவன் மனைவியின் பயங்கர நெருக்கம் என்று காட்சிகள் வர, குடும்பத்தோடு இதைப் பார்ப்பவர்களுக்கு நிறைய சங்கடங்கள் இருந்திருக்கும். தவிர இளம் உள்ளங்கள் இது போன்ற காட்சிகளால் பாதிக்கப்பட வாய்ப்புண்டு.

தொகுப்பு : **ஜி.எஸ்.எஸ்.**

அண்மையில், ஒரு சினிமா டைரக்டர் வீட்டுக்கு டெலிபோன் செய்து, வீட்டிலிருந்த பெண்மணியிடம் ஆபாசமாகப் பேசிய ஒரு மர்ம ஆசாமியைப் போலீஸ் பிடித்தது. அந்த நபர், வெகு சுலபமாகப் பிடிபட உதவியாக இருந்தது ஒரு சின்னஞ்சிறு உபகரணம். இதற்கு 'கிளி.்.ப்' என்று பெயர்.

'Calling line identification facility' என்பதன் சுருக்கமே 'கிளி.்.ப்'. இந்தக் கருவியை டெலிபோனுடன் இணைத்து விட்டால் போதும். எங்கேயிருந்து போன் வந்தாலும், அந்த எண் என்ன என்பதை இக்கருவி காட்டிவிடும். மேற்கூறிய டைரக்டர் விஷயத்தில், மர்ம ஆசாமி டெலிபோன் பண்ணியபோது, அவன் எந்த டெலிபோனிலிருந்து பேசினான் என்று இக்கருவி காட்டிவிட, போலீஸ் அந்த எண்ணுக்குரிய விலாசத்தில் போய், ஆபாசமாகப் பேசிய மர்ம ஆசாமியை 'லபக்'கி விட்டது.

''நம் வீட்டு டெலிபோனில் இக்கருவியை இணைத்துக் கொள்ள, டெலிபோன் இலாகா சமீபத்தில்தான் அனுமதி வழங்கியுள்ளது. ஆனாலும் இந்த பிரத்யேக வசதி பற்றி மக்களில் பல பேருக்குத் தெரியவில்லை'' என்கிறார் 'கிளி.்.ப்' கருவிகளை விற்பனை செய்து வரும் சூர்யா டெலிகாம் நிறுவனத்தைச் சேர்ந்த ஜெயகுமார்.

''இந்தக் கருவி என்ன விலையாகிறது?''

''நாலைந்து மாடல்கள் இருக்கின்றன. விலை ஆயிரத்து இருநூறு ரூபாயிலிருந்து, இரண்டாயிரம் வரை ஆகிறது. இதன் சிறப்பம்சம் என்னவெனில், டெலிபோன் வரும்போது அந்த நெம்பரைக் காட்டுவது தவிர, நூற்று அறுபது டெலிபோன் கால்கள் வரை மெமரியில் வைத்துக் கொள்ளும்! நாம் வீட்டில் இல்லாதபோது, யாராவது போன் செய்தால், அந்த நம்பரும் இதில் பதிவாகிவிடும். ஒரே நபர் இரண்டு மூன்று தடவை நாம் இல்லாத போது நம்முடன் தொடர்பு கொள்ள முயன்றிருக்கிறார் என்றால், இன்ன எண்ணிலிருந்து இத்தனை தடவை போன் வந்தது என்று கூட இது சொல்லிவிடும்.




''ஆட்களைக் கடத்திக் கொண்டு போய், பணம் பறிக்கும் ஆசாமிகள் இனி டெலிபோனில் பணம் கேட்டு மிரட்டினால் பாவம்! மாட்டிக் கொள்ள வேண்டியதுதான்!''

இக்கருவியைப் பயன்படுத்த விரும்பினால், டெலிபோன் இலாகாவிடம் எழுத்து மூலம் விண்ணப்பித்து, அனுமதி பெற வேண்டும். அப்போது கட்ட வேண்டியது ஐம்பது ரூபாய். அதன் பின் மாதாந்திரக் கட்டணமாக ஐம்பது ரூபாய்.

– பாரதி

நன்றி : கல்கி (14.3.99)

# ஏவி.எம்.மின் மினி டேப்ரெக்கார்டர்

ஏவி.மெய்யப்ப செட்டியார், எந்த விஷயமானாலும் அதை முறையாய், குறித்த நேரத்தில் செய்து முடிக்க வேண்டும் என்கிற கொள்கை உடையவர். அவருடைய வீட்டில் டைனிங் டேபிள், குளியல் அறை உட்பட பல்வேறு இடங்களில் மட்டுமல்லாமல் காரில்கூட குறிப்பு எழுதுகிற சிறு நோட்டுப் புத்தகங்கள் வைத்திருப்பார். அதுவும் எப்படி?

அந்த ஸ்கிரிப்ளிங் பேடின் ஒரு முனையில் நூல் கட்டி, அந்த நூலில் ஒரு பென்சிலையும் கட்டி வைத்திருப்பார். எந்த நேரத்தில் எது என்றாலும் உடனே அங்கே இருக்கிற குறிப்பு நோட்டில் குறித்து வைத்து விடுவார். அவர் குறிப்புகள் எழுதுகிற ஸ்டைலே தனிதான். பக்கத்தின் வலது மூலையில் பிள்ளையார் சுழி போட்டு, அந்த விஷயம் யாரிடம் சொல்லப் பட வேண்டுமோ அவரின் பெயரைக் குறிப்பிட்டு, அதன் கீழே விஷயத்தை விவரமாக எழுதி, இடதுபக்க கீழ் மூலையில் கையெழுத்திடுவார். அந்த குறிப்புகள் யாருக்காக என்றாலும் அது தமது பியூனாக இருந்தாலும் சரி, மிஸ்டர் என்ற அடைமொழியுடன்தான் அந்த நபரின் பெயரைக் குறிப்பிடுவார்.

காலை சுமார் பத்து மணியளவில் ஆபீசுக்கு வந்ததும், பல்வேறு குறிப்பு நோட்டுகளிலிருந்தும் கிழித்து எடுத்து வரப்பட்ட இன்ஸ்டிரக்ஷன்கள் அடங்கிய பக்கங்களைத் தமது செயலாளரிடம் கொடுத்து விடுவார். அவர், அந்த உத்தரவுகளை நபர் வாரியாக, தனித்தனித் தாள்களில் டைப் செய்து பல்வேறு பிரிவுகளிலுமுள்ள சம்பந்தப்பட்டவர்களுக்கு அனுப்பி வைப்பதோடு, அவற்றின் பிரதிகளை செட்டியாருக்கும் அனுப்புவார். அதாவது ஒரு வேலையை ஒருவரிடம் ஒப்படைத்து விட்டால், அது செய்து முடிக்கப்படும்வரை அதை நினைவூட்டிக் கொண்டே இருப்பது அவரது பாணி.

50களின் ஆரம்பத்தில், ரெமிங்டன் நிறுவனம், டிக்டபோன் என்ற கருவியை அறிமுகப்படுத்தியது. அந்தக் கருவியை வாங்கி விட்டார் ஏவி.எம். அந்தக் கருவியிலேயே அனைவருக்குமான உத்தரவுகளைப் பேசி, பதிவு செய்து விடுவார்.

அறுபதுகளின் ஆரம்பத்தில் மினி சைஸ் டேப் ரெக்கார்டர்கள் புழக்கத்துக்கு வந்தன. உடனே அதில் ஒன்றை வாங்கி விட்டார். அறுபத்தி எட்டாம் வருடம் ஏவி.எம். சரவணன், ஜெர்மனி சென திருந்தபோது, அங்கே ஒரு சிறிய சைஸ் டேப் ரெக்கார்டரைப் பார்க்க, அதை உடனே வாங்கிக் கொண்டு வந்து தம் தந்தைக்குக் கொடுத்தார்.

அதன்பின், ஏவி.எம்மோ அவரது புதல்வர்களோ, அயல்நாடு சென்றால், லேட்டஸ்ட் மினி டேப்ரெக்கார்டர்களை வாங்கி வருவது வழக்கமாகி விட்டது.

"அப்பச்சி (ஏவி.எம்) டேப்ரெக்கார்டரில் பலருக்கும் உத்தரவு இடுகிறபோது, அவை தெளிவாக இருக்கும். உச்சரிப்பு மட்டுமல்லாது, சொல்லுகிற விஷயத்தை எளிதாகப் புரிகிற மாதிரி சொல்லுவார். முக்கியமான இடங்களில் ஒன்றுக்கு இரண்டு தடவையாய்ச் சொல்லி, விஷயத்தின் முக்கியத்துவத்தைப் புரிய வைப்பார்" என்கிறார் ஏவி.எம். சரவணன்.

சராசரியாக இரண்டு வருடங்களுக்கு ஒரு டேப் ரெக்கார்டரைப் பயன்படுத்தினார் எங்கள் தந்தை எனலாம். அவர் மறைவுக்குப் பின் அவர் நினைவாக, அவர் பயன்படுத்திய பல மினி டேப்ரெக்கார்டர்களுள் ஒன்றை நான் பாதுகாத்து வருகிறேன்" என்கிறார் ஏவி.எம். சரவணன்.

1979 ஆகஸ்ட்டில், அவர் மறைவதற்கு சில தினங்களுக்கு முன்பு, ஒரு பார்வையற்ற பெண்ணிடமிருந்து 'தாம் பி.ஏ படிக்கும் மாணவி என்றும், ஒரு டேப்ரெக்கார்டர் இருந்தால், தம் படிப்புக்கு மிக உபயோகமாக இருக்கும்' என்றும் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். உடனே ஏவி.எம். தாம் அப்போது புதிதாக வாங்கியிருந்த ஒரு சிறு டேப் ரெக்கார்டரை அவருக்கு அனுப்பி வைத்து விட்டார். அந்தப் பெண் பார்வையற்றவராக இருந்தால், அந்த டேப்ரெகார்டரை எப்படிப் பயன்படுத்துவதென்று ஒரு டேப்பில் பேசி அதையும் கூடவே அனுப்பி வைத்தார்.

**— எஸ். சந்திரமௌலி**





# மூடிக்கிடக்கும் தொழிலகங்கள்; காரணம் என்ன?

'லாக்கவுட்' என்கிற ஒரு வார்த்தைக்குப் பின்னால் ஆயிரக்கணக்கான தொழிலாளர்களின் சோக வாழ்க்கை புதைந்திருக்கிறது. சென்னை தாம்பரத்திலிருக்கும் எம்.இ.பி.இசட் (Madras Export Processing Zone) வளாகத்தில் இருக்கும், ஜெ.டி.எஸ் என்ற கம்பெனி கம்ப்யூட்டரில் உபயோகப்படும் 'டிஸ்க் டிரைவ்' என்ற மென் பொருளை உற்பத்தி செய்து வருகிறது. 1996, 97, 98-ம் ஆண்டுகளில் தரமான கம்ப்யூட்டர் மென்பொருளை ஏற்றுமதி செய்ததற்காக, பாரதப் பிரதமரிடம் விருது வாங்கிய இந்த நிறுவனம், ஜனவரி 6-ம் தேதியிலிருந்து மூடப்பட்டு விட்டது.

இதன் தொழிற்சங்கச் செயலாளர் ஜி. ரவி, "எங்க கம்பெனில முதல்ல 10,000 பேர் வேலை பார்த்தாங்க. அதுல 9,000 பேர் பெண்கள். 8,000 தொழிலாளர்களை மே '98 வரைக்கும், பல காரணங்களைச் சொல்லி கொஞ்சம் கொஞ்சமா வீட்டுக்கு அனுப்பிடுச்சு நிர்வாகம். இப்போ வேலை பாக்குறது 1,200 பேர். அதுலயும் அஃபிஷியல் ஸ்டாப் போக 850 பேர்தான் வேலை பாக்குறோம். நவம்பர் மாசம் கம்பெனி நிதி நிலைமை சரியில்லைன்னு, சம்பளத்துல 30 சதம் பிடித்தம் செய்வோம்னு சொன்னாங்க. அதுக்கு எதிர்ப்பு தெரிவிச்சோம். அப்புறம் கொஞ்சம் பேரைத் தவிர எல்லாருக்கும் முழுச் சம்பளம் கொடுக்க நிர்வாகம் ஒத்துக்கிச்சு. ஜனவரி 6-ம் தேதி எந்தவிதமான முன்னறிவிப்பும் இல்லாம, கம்பெனி நோட்டீஸ் போர்டுல 'லாக்கவுட்'னு ஒட்டிட்டாங்க. அதுக்கு அவங்க சொல்ற காரணம், நாங்க ஸ்டிரைக் பண்ணினோம், அதுவுமில்லாம கம்பெனிக்கு ஆர்டர் எதுவும் கைவசம் இல்லை என்பது. உண்மை என்னன்னா நாங்க ஸ்டிரைக் எதுவும் பண்ணலை. 'லாக்கவுட்' நோட்டீஸ் ஒட்டற அன்னிக்கி கூட கம்பெனிக்குள்ள வேலை பாத்துட்டுத்தான் இருந்தோம். சட்ட விரோதமா அவங்க இந்த லாக்கவுட்டை அறிவிச்சிருக்காங்க" என்றார்.

கம்பெனியின் தொழிற்சங்கத் தலைவர் சித்ரா சொன்னார்.

"இது சட்டத்துக்குப் புறம்பான லாக்கவுட். யூனியன் பிரச்னையை வச்சுத்தான் இந்த நிர்வாகம் லாக்கவுட் செஞ்சிருக்கு. நிர்வாகத்துல இருக்குற ஈஸ்வரன்கிற ஒரு மானேஜர் சொல்றார், 'யூனியனை விட்டுட்டு வாங்க வேலை தர்றோம்னு'. அதுமட்டும் எப்படி சாத்தியம், கம்பெனி லாக்கவுட்ல இருக்கறப்போ?" என்றார்.

"8000 பேரை வீட்டுக்கு அனுப்பத் தெரிஞ்சவங்களுக்கு, 800 பேரை வீட்டுக்கு அனுப்பறது ஒண்ணும் பெரிய விஷயமில்லை. யூனியனை உடைக்க அவங்க செலவழிக்கிற காசை, நியாயமான முறைல தொழிலாளிக்குச் செலவு பண்ணலாம். முதல்ல 'மாடுலர் எலெக்ட்ரானிக்ஸ்' அப்படிங்கிற பேர்ல கம்பெனி நடத்தினாங்க. இப்போ அதோட பேரு 'ஜெ.டி.எஸ்'. எங்களையெல்லாம் வீட்டுக்கு அனுப்பிச்சுட்டு, கம்பெனியை மூடின மாதிரி காட்டிட்டு, வேற பேர்ல கம்பெனி



• ரவி

திறப்பாங்க. அப்பத்தானே குறைஞ்ச சம்பளத்துக்குப் புது ஆட்களை வேலைக்குப் போடலாம்'' என்றார் விமலா – யூனியன் பொருளாளர்.

நிர்வாகத் தரப்பிலிருந்து ஜெனரல் மானேஜர் போஸ் மட்டும்தான் பேசினார். ''எங்க கம்பெனி மாதிரி, 1980-ல் உலக அளவுல மொத்தம் இருபது கம்பெனிகள் இருந்தன. 1996-ல் மொத்தம் நான்கு கம்பெனிதான் மிஞ்சியது. எங்க கம்பெனி ப்ராடக்டுக்கு இப்போ மார்க்கெட் இல்லை. 'பில் கேட்ஸ்' எவ்வளவு பெரிய ஆளு. அவரே அயர்லாந்துல ஒரு கம்பெனிய க்ளோஸ் பண்ணிட்டார்.





• விமலா


• சித்ரா

தொழிலாளிகளோட சம்பளத்தை என்னிக்குமே நாங்க குறைச்சதில்லை. வேலை இல்லாதபோது இல்லைன்னுதானே சொல்ல முடியும். ஜனவரி 6-ம் தேதி அவங்கதான் ஸ்டிரைக் நடத்தினாங்க. அதுதான் உண்மை. நாங்க தொழிலாளிகளிடம் பேசப் போனப்போ, சி.ஐ.டி.யு. சங்கத்தைச் சேர்ந்த சாதிக் பாஷாங்கறவர் 'எதாயிருந்தாலும் எங்கிட்ட பேசுங்க'னு கோஷம் போட்டார். அன்னிக்கு அவங்க ஸ்டிரைக் நடத்தினதுக்கு போலீஸ்தான் சாட்சி. போன வருஷம் ஜூலை மாதம் வரை, மாத சம்பளம் மட்டும் ஒரு கோடியே இருபத்தைந்து லட்ச ரூபா கொடுத்துட்டிருந்தோம். இப்போ முப்பத்தி ஏழு லட்ச ரூபா கொடுக்கறோம். கையில ஆர்டர்ஸ் இல்லை!'' என்றார்.

''மூன்று வருடம் 'சிறந்த மென்பொருள் ஏற்றுமதிக்கான விருது' வாங்கியிருக்கிற கம்பெனி நஷ்டத்திலா ஓடுகிறது?'' என்று நாம் கேட்டபோது, ''நஷ்டமெல்லாம் இல்லை. ஆனா, பிரச்னைகள் இருக்கு!'' என்றார்.

''என்ன பிரச்னை? உங்கள் நிர்வாக இயக்குனரோடு பேச வேண்டுமே'' என்று நாம் சொன்னதற்கு, ''பிரச்னைன்னா பிரச்னைதான். இப்போ நிர்வாகத்தில் யாருமே இல்லை. ஆக்டிங் மானேஜிங் டைரக்டர் ஆனந்த வெங்கடேஷ், மானேஜிங் டைரக்டர் கிருஷ்ண குமார் பட்டா, எல்லோரும் ராஜினாமா செய்து விட்டார்கள். நானும் ராஜினாமா செய்து விட்டேன். கல்கிக்காகத்தான் பேசுகிறேன்'' என்றார் அவர்.

நூறு சதவீதம் ஏற்றுமதிக்கான – பல விதமான பொருள்களை உற்பத்தி செய்து, நம் நாட்டுக்கு அந்நியச் செலாவணியை ஈட்டித் தரும் மெப்ஸ் வளாகத்தில், நாற்பது ஐம்பது கம்பெனிகள் மூடிய நிலையில்தான் உள்ளன. கம்பெனியை எப்படியும் திறந்து விடுவார்கள் என்கிற நம்பிக்கையில், கையில் சோற்றுப் பொட்டலத்துடன் கம்பெனி வாசலில் தினமும் உட்கார்ந்துவிட்டு வருகிறார்கள் தொழிலாளர்கள். ஒருபுறம், புதுப்புது தொழிற்சாலைகள் வரவிருப்பது பற்றிப் பேசும் தமிழக அரசு, மறுபுறம் இப்படி மூடிக்கிடக்கும் தொழிலகங்கள் பற்றியும் கவனிக்க வேண்டும்.

**— கே. பாலசுப்ரமணியன்**

படங்கள் : **சி.பி. ராமச்சந்திரன்**

யக்ஞத்தில் சமர்ப்பிக்கக் கூடிய ஹவி ஸாகவும் இருப்பவன் அந்த விஷ்ணுதான் என்று சொன்னேன்.

யக்ஞத்திலே என்னவெல்லாம் ஹவி ஸாக சமர்ப்பிக்கிறோம்...! தயிரினால் ஹோமம் பண்ணு, நவதான்யத்தால் ஹோமம் பண்ணு, எள்ளினால் ஹோமம் பண்ணு, தேனினால் ஹோமம் பண்ணு, பாலினால் பண்ணு, என்று பலவாராகச் சொல்லப்பட்டிருக்கிறது.

முதல் நாள் தயாரிக்கப்பட்ட தயிரைக் கொண்டு வந்து ஹோமம் பண்ணுகிற போது, இங்கே மந்திரம் என்ன பிரார்த்திக்கிறது...? 'ஹே விஷ்ணு! பகவானே! இந்த ததி இருக்கிறதே தயிர்... அந்தத் தயிர் ஹவிஸை உனக்கு உபயோகிக்கும்படியாக- நாளைக்கு உனக்குச் சமர்ப்பிக்கும்படியாக நீ ரக்ஷித்து அருள வேண்டும்' என்று பிரார்த்திக்கிறது.

தயிர்தான் தயாராயிருக்கிறதே. அதை ரக்ஷிப்பதற்கு வேறு பிரார்த்தனை பண்ண வேண்டுமா? என்று கேட்டால் 'ஆமாம்!' என்கிறது வேதம்!

பண்ணுகிற ஒவ்வொரு காரியத்துக்கும் பிரார்த்தனை சொல்லப்பட்டிருக்கிறது. உட்கார்ந்தால் மந்திரம், எழுந்தால் இன்னொரு மந்திரம், நடந்து போவதற்கு ஒரு மந்திரம், தூங்குவதற்கு ஒரு மந்திரம், எழுந்து கொள்கிறபோது ஒன்று, சாப்பிடுகிற போது ஒன்று. இப்படியெல்லாம் இருக்கிறது என்று தெரியும் நமக்கு...

ஏன் அப்படி வைக்கப்பட்டிருக்கிறது வேதத்திலே என்று கேட்டால், 'தனியாக உட்கார்ந்து கொண்டு எல்லா மந்திரத்தையும் சொல்லு' என்றால் சிலரால் முடியாது. சரி, காரியத்துடனேயே சொல்லட்டுமே என்றுதான் இப்படி ஏற்படுத்தியிருக்கிறது.

அவகாசம் இல்லை என்று போய் விடாமல், அந்தந்த காரியத்தின் கூடவே சொல்லிவிட்டால் நல்லது என்று வேதமே சொல்கிறது.

# துளையொன்றுமில்லை

சமகத்திலே நாம் பார்க்கலாம்- 'உட்கார்ந்திருக்கிறவனுக்கு நமஸ்காரம்; படுத்துக் கொண்டிருக்கிறவனுக்கு நமஸ்காரம்...' என்றெல்லாம் வருவதை.

பகவானும் படுத்துக் கொண்டிருக்கிறான். உட்கார்ந்து கொண்டிருக்கிறான். அவனுக்கு நாம் எப்படி நமஸ்காரம் பண்ணுகிறோமோ, அந்த மாதிரி நம்முடைய செயல் ஒவ்வொன்றையும் அவனை மனத்தாலே நினைத்துக் கொண்டு நடத்த வேண்டும்.

இதைச் சுலபமாக்கத்தான் ஸ்வாமி தேசிகன் கற்றுக் கொடுத்திருக்கிறார்:

காலையில் எழுந்திருக்கும்போதே ஹரி ஹரி என்று ஏழு தடவை சொல். பெருத்த குரலில் சொல். ஆங்காங்கே தூங்குகிறவர்களெல்லாம் அந்த நாமாவைக் கேட்டவாறே எழுந்திருக்கும்படி சொல்.

அதே மாதிரி காலைக் கடன்களெல்லாம் முடித்து வெளியே கிளம்புகிறோம்- உத்தியோக நிமித்தமாக- அப்போது யாரை நினைக்க வேண்டும்? கேசவனை நினைக்க வேண்டும். அவனை தியானம் பண்ணிக் கொண்டு போனால் எடுத்த காரியம் வெற்றி.

ஊர்த்வ புண்டரங்களை உடம்பிலே தரிக்கிறபோது கேசவன் எங்கே இருக்கிறான் என்றால், நெற்றியிலே இருக்கிறான். நான்கு சக்கரங்களோடு காட்சியளிக்கிறான். நான்கு திருக்கரங்கள்- நான்கு சக்கரங்கள். ஸ்வர்ண மயமாய்ப் பிரகாசிக்கிறான். ஆகையினாலே நெற்றியிலே திருமண்ணை இட்டுக் கொள்கிற போது கேசவாய நம: என்று தியானம் பண்ண வேண்டும்.

இப்படி நம்முடைய உடம்பிலேயே பகவானுடைய திருநாமங்களினால் பிரதிஷ்டை பண்ணப்படுகிறது. நித்யம் அவனை தியானம் பண்ணுவதற்காகத்தான் ஊர்த்வ புண்டரங்களை அணிகிறோம்- வெறும் அலங்காரத்துக்காகப் போட்டுக் கொள்வதில்லை.




தொண்டரடிப்பொடி ஆழ்வார் அப்படி வெறுமே அலங்காரம் செய்து கொள்வோரைப் பரிகாசம் செய்கிறார்:

'புறம்சுவர் கோலம் செய்து புள்கவ்வக் கிடக்கின்றீரே...'

– ஒரு நாமாவையும் சொல்லாமல் வெறுமே திருமண்ணைப் போட்டுக் கொண்டால் வெளிச் சுவரை அலங்காரம் பண்ணிவிட்டு உட்காருகிற மாதிரி தான்...! பக்தி இல்லையானால் என்ன லாபம்?! அப்படி வெறும் சுவராய் இருக்கிறவனை ஆகாசத்திலே சஞ்சாரம் பண்ணுகிற பக்ஷிகளெல்லாம் கொத்திக் கொண்டு போய்விடும். அந்த மாதிரி அல்பமான சரீரம்! இந்த சரீரத்தை உயர்த்த, கேசவனை தியானம் பண்ணிக் கொண்டு வெளியே கிளம்பினோமானால் எல்லா காரியங்களும் நமக்குக் கைகூடும். இதை நாம் பரீக்ஷார்த்தமாகக் கூட பார்க்கலாம். பரீக்ஷையிலே பகவான் ஜெயிப்பான்!

அதே மாதிரி கோவிந்தம்! ஆநிரை காத்து, கோவர்த்தன கிரியைக் குடையாய்ப் பிடித்த எம்பெருமான் கோவிந்தனை தியானம் பண்ணுகிறபோது கோவிந்தாய நம: என்று கூப்பிடவேண்டும். படுத்துக் கொள்ளப் போகிறபோது சொல்ல வேண்டியது. குலசேகர ஆழ்வார் இதை முகுந்த மாலையிலே சொல்கிறார். க்ஷீராப்தி சயனன் அவன். எம்பெருமான் மாதவன் என்று பெயர் அவனுக்கு. ஆதிசேஷனில் போகம் அவனுக்கு.

பகவான் எப்படியெப்படியெல்லாம் தன்னை மாற்றிக் கொள்கிறானோ, அப்

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

படியப்படியெல்லாம் பணிவிடை செய்பவன் ஆதிசேஷன்.

சேஷன் என்றால், பணிவிடை பண்ணக் கூடியவன்.

ஆதி என்றால் வைகுண்டத்திலேயே அந்தப் பணிவிடை பண்ணக் கூடிய முதலாமவன். ஆதியிலிருந்து பணிவிடை செய்து வருபவன் ஆதிசேஷன்.

பகவான் போகும்போது குடையாயிருக்கிறான்.

உட்காருகிறபோது ஆசனமாயிருக்கிறான்.

நின்றால் பாதுகையாயிருக்கிறான்.

சர்வவிதமாகவும் கைங்கர்யம் பண்ணுகிறான்.

அத்தகைய ஆதிசேஷனுடன் விளங்கும்படியான எம்பெருமான் மாதவன்.

வசந்த ருதுவுக்கு மாதவம் என்று ஒரு பெயர். ஆந்திர தேசத்திலே இந்த வசந்த ருதுவிலே நல்ல ரஸாளு மாம்பழம் வரும். அதைக் கோயிலில் கொண்டுவந்து கொடுப்பார்கள்; வேதாத்யயனம் பண்ணுகிற பிராம்மண உத்தமர்களுக்குக் கொடுப்பார்கள்... அப்போது சங்கல்பம் பண்ணுகிறபோது, 'வசந்த மாதவ ப்ரீதயே...' 'வசந்த ருதுவுக்கு அதிபதியான மாதவனுக்குப் ப்ரீதியாக' என்று சொல்வார்கள்.

லக்ஷ்மியோடு சேர்ந்து விளங்கக் கூடிய இந்த மாதவனுக்கு மது மாதவன் என்று பெயர். வசந்த ருதுவுக்கு –சித்திரை– வைகாசி– மது மாதம் என்று, மாதவ மாதம் என்று பெயர்.

இப்படிப்பட்ட மாதவனை தியானம் பண்ணிக் கொண்டோமேயானால் துர்ச்சொப்பனம் வருமா...? நல்ல தூக்கம் வரும் என்பதை நாம் பார்க்கலாம்.

ஆகையினாலே, இப்படி நம் செயலிலே நான்கு திருநாமங்களையும் நினைத்துக் கொண்டு இயங்கினோமானால் நித்ய காரியங்களெல்லாம் நமக்கு சௌக்கியமாக நடக்கும்.

இப்படி நித்ய காரியங்களின்போது நாமாவைச் சொல்கிற மாதிரி வேதாத்யயன அனுஷ்டானங்களுக்கும், யக்ஞ யாகாதிகளுக்கும் ஒவ்வொரு சின்ன காரியத்துக்கும் மந்திரம் சொல்ல வேண்டியிருக்கிறது.

மந்திரத்தைச் சொல்ல வேண்டுமானால் ஸ்வரம் நியமமெல்லாம் இருக்கிறது. மந்திரமே எளிய ரூபமாய், திருநாமமாய் வந்துட்டதாலே எல்லோரும் சுலபமாகச் சொல்லிப் பலனையும் அடையும்படி அமைந்திருக்கிறது.

மந்திரங்களுக்கு வருவோம்– ஒவ்வொன்றுக்கும் மந்திரம் உண்டு என்று சொன்னேன். ஹவிஸை ரக்ஷிக்கும்படி பிரார்த்திக்கிற மந்திரம் கூட உண்டு.

விஷ்ணுவை அழைத்து, 'இந்த 'ஹவிஸை நீ ரக்ஷி' என்பது அந்த மந்திரத்தின் சாமானியமான அர்த்தம். இதையே வேதாந்தத்தில் உபநிஷத்துக்குப் போனோமானால் அங்கே ஹவிஸ் என்பது என்ன...?

ஆண்டாள் பாசுரத்தில் ரொம்ப அழகாகச் சொல்கிறாள் பாருங்கள்:

வானிடை வாழும் அவ்வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்த அவி

'அவி' என்பது இங்கே ஹவிஸ். மறையவர், வேதம் வல்லவர்கள்–யக்ஞத்திலே எடுத்து வைத்த ஹவிஸ் இருக்கிறதே, தேவதைகளுக்காக சங்கல்பிக்கப்பட்ட ஹவிஸ் அது.

விஷ்ணு சித்தருடைய திருமகளானதனாலே, உயர்ந்த குடும்பத்திலே அவள் பிறந்ததனாலே ஸ்ரீவில்லிபுத்தூரிலே அவளுடைய வாக்கிலே வேத மணம் கமழ்கிறது. திவ்ய பரிமளம்; வேதத்தினுடைய சுவாஸனை ஒவ்வொரு அக்ஷரத்திலேயும்– ஒவ்வொரு பதத்திலேயும்– இருக்கிறது. திருப்பாவையில் எங்கே தொட்டுப் பார்த்தாலும் நிகம பரிமளம்தான்! வேத

## அருள்வாக்கு

'ப்ரேயர்' என்றால் எதை வைப்பது? இதுவோ மதச்சார்பில்லாத ஸெக்யுலர் அரசாங்கம். அநேக மதங்களைச் சேர்ந்த பசங்கள் சேர்ந்து படிக்கும்போது, எந்த ஒரு மதத்தின் பிரார்த்தனையை மட்டும் வைத்தாலும் தப்பாகி விடும் என்று யோசித்தார்கள். முடிவாக இப்போது பசங்கள் எல்லாரும் பாடங்கள் ஆரம்பிப்பதற்கு முன்னால் இரண்டு நிமிஷமோ மூன்று நிமிஷமோ மௌனமாகப் பிரார்த்தனை பண்ணிக் கொள்ளட்டும் என்று தீர்மானம் பண்ணியிருக்கிறார்கள்.

சின்னக் குழந்தைகளுக்கே இப்படி மௌனத்தை அவர்கள் சொல்வதால், நாமும் தான் பெரிய குழந்தைகளுக்கும் மௌனத்தைப்

பற்றிச் சொல்லலாமே என்று தோன்றிற்று.



அவர்கள் மட்டும்தான் மாணவர்களா என்ன? நீங்கள், நான் எல்லோரும் மாணவர்கள்தான். லோகம் என்கிற இந்த பெரிய ஸ்கூலில் வாழ்நாள் பூராவும் விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டிய வித்யார்த்திகளாகத்தான் நாம் எல்லோருமே இருக்கிறோம்.

''மோனம் என்பது ஞானவரம்பு'' என்று பிரம்ம வித்யையாகவே அதைச் சொல்லியிருக்கிறது. ஜன்மா எடுத்ததற்கு இந்த ஜன்மாவில் நாம் என்னென்ன செய்ய வேண்டுமென்று தெரிந்து கொள்ள வேண்டியது எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் ஒன்றுமே செய்யாமல், பேசாமல், நினைக்காமல் இருக்க வேண்டுமென்று தெரிந்து கொள்வதுமாகும். மனஸ் போகிறபடியெல்லாம் நினைப்பது, வாயில் வந்தபடியெல்லாம் பேசுவது என்றால், பிற்பாடு ஜன்மாவின் பலனையே அடையவில்லை என்று துக்கப்படும்படியாகும்.

அதனால்தான் மனஸை அடக்கி மௌனமாயிருக்க வேண்டுமென்று **தெரிந்து** கொள்வதே (இப்படிச் **செய்வது** அப்புறம் இருக்கட்டும்) உங்களுக்கு ஒரு வித்யா லாபம் என்று நினைத்துச் சொன்னேன்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

வாசனை இல்லாத வாக்கே கிடையாது.

யக்ஞத்துக்கு நாம் போனோமானால், விஷ்ணுவுக்கானது என்று ஹவிஸைத் தனியே எடுத்து வைப்பதைப் பார்க்கலாம். 'விஷ்ணுவுக்காக மூன்று கபாலம்' என்று வைப்பார்கள். கபாலம் என்பது ஹவிஸை வைக்கிற பாத்திர சாதனம்.

கலாபத்தில் எடுத்து வைத்ததை விஷ்ணு மந்திரத்தால் அபிமந்த்ரிக்க வேண்டும். அதே மாதிரி பதினொரு கபாலங்களில் எடுத்து வைத்து ருத்ர மந்திரத்தினாலே அபிமந்த்ரிக்கிறோம். பன்னிரண்டு கபாலங்களில் வைத்து சூர்ய மந்திரத்தினால் அபிமந்த்ரிக்கிறோம்– ஏனென்றால் துவாதச ஆதித்யாள் என்று பன்னிரண்டு சூர்யர்கள் உண்டு.

இப்படி ஒவ்வொரு தேவதை பெயரைச் சொல்லி அபிமந்த்ரித்து ஹவிஸை வரிசையாக எடுத்து வைத்திருக்கிறது.

எல்லாம் சொன்ன பிற்பாடு ஹோமம் பண்ணுகிறபோது, விஷ்ணுவுக்கு என்று எடுத்து வைத்ததைக் கொண்டு 'இந்த்ராயஸ் வாஹா...' என்று ஹோமம் பண்ணலாமா...?

அப்படி விஷ்ணுவுக்கென்று எடுத்து வைத்ததை இந்திரனுக்கு என்று சொல்லி ஹோமம் பண்ணினால் என்ன ஆகும்...?

யக்ஞம் கெட்டுப் போய்விடுகிறது! யக்ஞம் பலனை அளிக்காது. விபரீதமான பலன்களெல்லாம் வந்து சேரும்.

ஆகையினாலே எதிலுமே அசிரத்தையே கூடாது. இப்படிப் பண்ணினால் பரவாயில்லை; அப்படிப் பண்ணினால் பரவாயில்லை என்று கிடையாது. அததற்குரிய நியமப்படிதான் நடக்க வேண்டும். அதே மாதிரி இந்திரனுக்கென்று வைத்ததையும் விஷ்ணுவுக்கு மாற்றிச் சமர்ப்பிப்பதற்கில்லை...

இதையே செய்யக்கூடாது என்றால், ஆண்டாள் சொல்லுகிற அழகைப் பாருங்கள்:

வானிடை வாழும் அவ்வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்த அவி
கானிடைத் திரிவதோர் நரி புகுந்து
கடப்பதும், மோப்பதும் செய்வதும்....

'–எடுத்து வைத்த ஹவிஸை இன்னொரு தேவதைக்குச் சமர்ப்பிப்பதே தப்பு என்னும்போது எங்கேயோ காட்டிலே திரியக்கூடிய குள்ளநரி வந்து இதை எடுத்துக் கொண்டு போகுமேயானால் அது எப்படி நிர்ப்பலனாய்ப் போகுமோ... அந்த மாதிரி அந்த நாராயணன் விஷ்ணுவுக்கு என்று எடுத்து வைக்கப்பட்ட இந்த உடல், பொருள், ஆவி என்கிற என்னுடைய இந்த ஆத்மா என்கிற ஹவிஸ், வேறு மனுஷ்யனுக்கென்று வாழ்க்கைப்பட்டால் பொறுக்குமோ...?' என்கிறாள் ஆண்டாள்:

'மானிடவர்க்கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய் மன்மதனே!'

வேதார்த்தத்தை எவ்வளவு அழகாக தமிழ்ப் பாகரத்தில் எடுத்துக் காட்டுகிறாள் ஆண்டாள்!

(தொடரும்)

இன்று நான் அளவில்லாத சந்தோஷத்துடன் இருக்கிறேன்.

பகவான் ஜகந்நாதனின் மேல் எனக்கிருந்த பிரேமை என்பது உயிரற்ற சொற்களாலோ அதன் கூட்டமைப்பான எழுத்தாலோ கலபமாய் விளக்கக்கூடிய ஒன்றல்ல. என் அப்பன் ஜகந்நாதனை நினைக்கும் போதுதான் எல்லா மொழிகளுமே எத்தகைய குறையுடையன என்று எனக்குத் தோன்றுகிறது. என் உடம்பை ஒவ்வொரு செல்லாய்த் துளைத்தெடுத்துப் பார்த்தாலும் ஒவ்வொன்றும் அவனது திருநாமத்தையே சதா ஸ்மரணை செய்தவண்ணம் இருக்கும். அந்தவிதமாய், என் ஊனிலும் உணர்விலும் ஒன்றாய்க் கலந்து கரைந்து விட்டவன் பகவான் ஜகந்நாதன்.

என் அப்பா தன் இறுதி மூச்சை விடும் சமயம் என் கையைப் பிடித்துக் கொண்டு ஒன்று சொல்லி விட்டுப் போனார். "நாராயணா... ஒரே ஒரு விஷயத்தை மட்டும் மறந்து விடாதே. நம் குடும்பத்தில் தலைமுறை தலைமுறையாய் எல்லோருமே தங்கள் வாழ்க்கையில் ஒரு தடவையாவது அந்த ஊருக்குச் சென்று நம் குலதெய்வம் பகவான் ஜகந்நாதரை தரிசித்து விடுவது என்பது வழக்கம். அவ்வளவு தூரம் பிரயாணம் செய்து இறைவனை தரிசித்து வருவதென்பது ரொம்பச் சிரமமான விஷயம்தான். இருந்தும் எப்படியாவது பிரயாசைப்பட்டு ஒரு தடவையாவது அங்கு சென்று வந்து விடு. இது நம் குல வழக்கம் நாராயணா. இதை மட்டும் நீ மறந்து விடாதே. அப்புறம் என் ஆன்மா சமாதானமடையாமல் இங்கேயே சுற்றிக் கொண்டிருக்கும்" என்று சொல்லி விட்டு அந்த க்ஷணத்திலேயே உயிரையும் விட்டார்.

அப்பா தன் கடைசி மூச்சின் போது சொல்லி விட்டுச் சென்ற ஒரு விஷயம் என்கிற அழுத்தமான காரணம் இருந்தாலும், எனக்குள்ளும் ஓர் உந்துதல் உள்ளுக்குள்ளே உறுத்திக் கொண்டே இருந்தது. நம் பரமனைப் பார்க்க வேண்டும். அவன் பாதாரவிந்தம் பற்றி, சேவித்து என் பிறவித் துயர் போக்க வேண்டும். அவன் விஸ்வரூப தரிசனத்தை விழி நிறையக் கண்டு நெக்குருக வேண்டும்... என்றெல்லாம் நெஞ்சு கிளர்ந்த ஏக்கம் எனக்குள்ளும் இருந்தது.

அதற்கு இன்று ஒரு வாய்ப்பு கூடி வந்தது நினைத்து நான் சிலிர்த்துச் சிலாகிக்க வேண்டாமா... எத்தகைய ஒரு கொடுப்



பினை இது. நினைந்து நினைந்து... நெஞ்சம் நெகிழ்ந்து நெகிழ்ந்து.. ஊற்றெழும் கண்ணீரதனால் உள்ளம் நனைந்து நனைந்து... நான் எம்பெருமானைச் சேவிக்கக் கிடைத்ததொரு அருமையான வாய்ப்பல்லவா இது.

அதனால்தான் இன்று அளவில்லாத சந்தோஷத்தில் இருந்தேன்.

மனைவி குழந்தைகளையெல்லாம் உசுப்பி விட்டு, விஷயம் விளக்கி, உடலளவில், மனத்தளவில் அவர்களைத் தயார் செய்து, நெடிதான ஒரு பயணத்துக்குப் பின், இன்று என் ஐயன் பள்ளிகொள்ளும் இந்த மண்ணை மிதித்தபோது சிலிர்ப்பாய் இருந்தது. 'ஜில்'லென்ற ஒரு பரவசம் ஒவ்வொரு நரம்புக் குழலுக்குள்ளும் கடிதாய்ப் பரவியது.

எதிர்பார்த்தபடியே நான் தகவல் தெரிவித்திருந்த ப்ரிதிஹாரி ஸ்டேஷனுக்கு எங்களை அழைத்துப் போக வந்திருந்தார். ப்ரிதிஹாரி கோயில் கைங்கர்யக்காரர்களில் ஒருவர். அந்தக் கோயிலில் மடப்பள்ளி காரிய்ங்கள் முதல் சுற்றுலாப் பயணிகளுக்கு கைடாய் சேவை புரிவது வரை அத்தனை நியமங்களுக்கும் ஊழியர்கள் உண்டு. அவர்கள் எண்ணிக்கை அறுபது - எழுபது இருக்கும். அவர்களுக்கு கைங்கர்யக்காரர்கள் என்று பெயர், அவர்களுக்கு தினம் படியளப்பது எம்பெருமான்தான். அதாவது அந்த ஊரை ஆண்ட மகாராஜா பல நூறு வருஷங்களுக்கு முன் எம்பெருமானுக்கு எழுதி வைத்து விட்டுப் போன சொத்துக்களும் நிலங்களும்தான் இந்த கைங்கர்யக்காரர்களுக்கு ஜீவனோபாயம்.

அந்தக் கைங்கர்யக்காரர்களில் ஒருவர் ப்ரிதிஹாரி.

வசதியான ஒரு ஹோட்டல் அறையில் எங்களைத் தங்க வைத்து விட்டு, குளித்து முடித்துத் தயாராய் இருக்கச் சொல்லி விட்டு, ப்ரிதிஹாரி எட்டு மணிக்கு வந்து எங்களைக் கோயிலுக்கு அழைத்துச் செல்வதாய் சொல்லிச் சென்றார்.

நானும், என் மனைவியும், மகனும் அவரது கூற்றை சிரமேற்கொண்டு, சடுதியில் கடன்களை முடித்து எட்டு மணிக்கு பய பக்தியுடன் தயாராகி விட்டோம். என் மனைவியும் மகனும் ஏக சந்தோஷமாய் இருந்தபோதிலும், எனக்கு மட்டும் ஏதோ ஒரு நெருடல் உள்ளார்ந்து உறுத்தியபடி இருந்தது. அது என்னவென்று அப்போது தெரியாத நிலையில் நானும் பட்டை பட்டையாய் நெற்றியில் திருநீறு பூசி எம்பெருமானைத் தரிசிக்கப் புறப்படத் தயாராகி நின்றேன்.

- எட்டு மணிக்கு ஒரு நிமிடம் கூட இங்கும் அங்கும் தவறாமல் கனகச்சிதமாய் ப்ரிதிஹாரி வந்து சேர்ந்தார்.

ப்ரிதிஹாரி, கிளம்பலாமா என்று கேட்க, நாங்கள் தயாராய் நின்றோம். இங்கிருந்து கோயிலுக்கு ஒரு கிலோ மீட்டர் தூரம் இருப்பதாயும், அதற்கு நடந்து சென்றால் விசேஷம் என்றும் ப்ரிதிஹாரி சொல்ல, நாங்கள் மூவருமே அதற்கு உடனே தலையசைத்தோம்.

வழியில் ஏதாவது வீண் கதைகளைப் பேசி நேரத்தை விரயமாக்காமல் உருப்படியாய் ஏதாவது தெரிந்து கொள்ள வேணும்



என்பதாய் நான், ப்ரிதிஹாரியை எம்பெருமான் அவதரித்த அந்த புண்ய ஸ்தலத்தைப் பற்றியும் அவனது லீலா விநோதங்கள் பற்றியும் விளக்கிச் சொல்லக் கேட்டுக் கொண்டேன்.

ப்ரிதிஹாரி பதின்மூன்றாம் நூற்றாண்டிலோ அல்லது பதினாறாம் நூற்றாண்டிலோ நடந்த ஒரு நிகழ்ச்சி பற்றி சொல்ல ஆரம்பித்தார்.

அப்போதெல்லாம் அந்த ஊரில் பண்டிகை நாட்களென்று விசேஷமாக ஏதும் கிடையாதாம். பகவான் ஜகந்நாதர் அவதாரம் செய்த ஜன்ம நக்ஷத்ர தினம் ஒன்றுதான் ஆண்டுதோறும் அங்கு வெகு விமரிசையாகக் கொண்டாடப்படும் ஒரு திருவிழாவாம். ஆறு கால பூஜையும், கோடி அர்ச்சனையும், தூபாலங்கார வைபவமுமாய் அன்றைய தினம் ஊர் திமிலோகப்படுமாம்.

முந்தைய நாள் இரவு பன்னிரண்டு மணி கழிந்து அடுத்த நாளின் தொடக்க நிமிஷம் ஆரம்பிக்கும்போது தொடங்கும் இந்த வைபவங்கள் மாலை சரியாக இரண்டு மணிக்கு நிறைவு பெறுமாம். அதன் பிறகு தேரோட்டம் ஆரம்பித்து நான்கு ரத வீதிகளிலும் உற்சவமூர்த்தி வலம் வரும்போது, தாரைகள் உச்சமாய் ஒலி எழுப்புமாம். தப்பட்டைகள் நிலமதிர முழங்குமாம். ஊரே ஒன்றாய்க் கூடி வடம் பிடித்து இழுக்கும் காட்சி அப்படியே நெஞ்சைக் கிள்ளுமாம்.

எனக்கு நெஞ்சு கிள்ளப்பட்டது. வாசுகிப் பாம்பாய் நீண்டு விரிந்த இரண்டு வடத்தை, இரு சாரியாய் ஜனக் கூட்டம் பகிர்ந்து நின்று மூச்சுப் பிடித்து இழுக்கும் காட்சி என் மனத்தில் விரிந்தது. தேருக்குள் கம்பீர நாயகனாய் என் பாண்டுரங்கன் – பண்டரிநாதன் சவிஸ்தாரமாய் வீற்றிருப்பதாய் பிம்பம் மலர்ந்தது. அவனுக்கு உடுக்கப்பட்ட பட்டாடையும் அதில் கோக்கப்பட்ட முத்து – வைடூரியங்களும் ஜாஜ்வல்யமாய் மினுமினுத்தன. சரம் சரமாய் அவன் கழுத்தில் தொங்கிய பவள – கோமேதக ஆபரணங்கள் கண்களை கூசச் செய்தன. என் விழி ஓரங்களில் மெல்லிசாய் நீர் திரண்டு 'களுக்'கென்று தரையில் சிந்தியது. நான் மெல்லக் குனிந்து தலை சாய்ந்து, முகிழ்த்த நீரை என் மேல் துண்டால் துடைத்துக் கொண்டேன்.

உருட்டி விட்ட நெல்லிக்காயாய் நான்கு ரத வீதிகளிலும் ஓடும் தேர், அன்று தெற்குத் தெரு மூலையில் வந்து கொண்டிருந்தபோது, 'படக்'கென்று ஏதோ கல்லில் மோதியது போல் நின்று விட்டதாம். வடம் பிடித்த எல்லாப் பொது ஜனமும் சக்கரத்தைச் சுற்றிச் சுற்றி வந்தும், தேர்ச் சக்கரங்களுக்கு எந்தவொரு தடையும் தென்பட வில்லையாம். இருந்தபோதும் சக்கரம் சுழலாதது எல்லோரையும் திகைக்க வைத்து விட்டதாம். ஜனங்கள் எல்லோரும் முழு பலத்தையும் திரட்டி பல் கடித்து இழுத்த போதும் தேர் ஓர் அங்குலம் கூட நகரவில்லையாம்.

காரணம் புரியாமல் ஜனங்கள் அனைவரும் பதறிக் களைத்திருந்த வேளையில், அன்று இரவு கோயில் பூசாரியின் கனவில் ஜகந்நாதர் வந்து இது மாதிரி உரைத்துவிட்டு மறைந்தாராம்.

"என் பக்தன் கான் உபைதுல்லா என் திவ்ய ஸ்வரூபத்தைக் காண வேண்டுமென்று நெஞ்சார விரும்புகிறான். அவனை என்னருகே வர விடாமல் சில கயவர்கள் தடுக்கிறார்கள். ஆகையால் அவன் வந்து என் தேரைத் தொட வேண்டும். அப்புறம்தான் நான் நகர்வேன்..." என்பதாய் பூசாரி வந்து சொன்னதும் எல்லா ஜனங்களும் மலைத்துப் போய் விட்டனராம்.

கான் உபைதுல்லா ஒரு முசல்மான் (முஸ்லீமை முசல்மான் என்றுதான் ப்ரிதிஹாரி சொன்னார்). அவர்களுக்கு அப்போது அங்கு அனுமதி மறுக்கப்பட்டிருந்தது. அதனால் அவர் நெஞ்சார விரும்பியும் ஜகந்நாதரைக் காண முடியாமல் இருந்தது.

பூசாரி சொன்னது போல் உபைதுல்லா வரவழைக்கப்பட்டு தேரைத் தொட்டதும் தேர் வழுக்கிக் கொண்டு நகர்ந்ததாம். வடம் பிடித்தவர்கள் மூன்று வயதுக் குழந்தையை விரலைப் பிடித்து அழைத்துச் செல்வதைப் போல், வடத்தைப் பற்றித் தேரை இழுத்து ஜகந்நாதரை நிலைசேர்த்து விட்டனராம்.



**"இதபாருங்க... நீங்க எங்கிட்ட புடவை வாங்காட்டியும் பரவாயில்லே... ஆனா பக்கத்து வீட்டுப் பொண்ணுகிட்ட காண்பிக்கணும்ங் கறதுக்காக 500 ரூபா புடவைக்கு 1000 ரூபாய்க்கு பில் போட்டுத் தர்றது சாத்தியமில்லே!"**

**– ஸ்ரீதர்**

இந்த நிகழ்ச்சி கல்வெட்டில் கூட இருப்பதாக ப்ரிதிஹாரி சொன்னபோது, நான் மெய் சிலிர்த்துப் போனேன். என் முகம் அழுகை பீறிட கோணிக் கொண்டது. மனசு எதற்கோ எக்கி எக்கிப் பறந்தது. எம் தலைவனை, சத்யஸ்வரூபியை, சச்சிதானந்த மூர்த்தியை தரிசிக்கப் போகிறோம் என்ற எண்ணம் எக்களித்துக் கும்மி கொட்டியது. தேகம் முழுவதும் மெலிதான ஓர் உஷ்ணம் பரவிப் படர்ந்தது.

எம்பெருமானின் கோயில் கோபுரம் கண்ணில் பட்டது. கோபுர தரிசனம் கோடி புண்ணியம் என்பதால் கோபுரத்தைக் கண்டவுடன் ரோட்டிலேயே சாஷ்டாங்கமாய் விழுந்து சேவித்து பின் எழுந்து நடந்தேன். கோபுரத்தின் நுழைவாயில் வந்து விட்டோம். பண்டாக்களின் 'வலி'மையான வரவேற்பு ஒருபுறம். இடப் பக்கம் பூக்கட்டு விற்பனை நடந்து கொண்டிருந்தது. வலப்பக்கம் செருப்பு வைக்க தேவஸ்தான கட்டணக் காப்பகம். அங்கே செருப்புகளை வைத்து விட்டு, அருகில் இருந்த தண்ணீர்த் தொட்டிக்குச் சென்று கால் அலம்பிவிட்டு மூவரும் வந்தோம். ப்ரிதிஹாரி உள்ளே அழைத்துச் செல்ல எங்களை வரிசையாய் நிற்க வைத்து விட்டு, டிக்கெட் வாங்கி வரச் சென்றார். என் பின்னே என் மகனும் மனைவியும்.

அப்போது அருகே தொங்கிக் கொண்டிருந்த ஒரு போர்டு என் கண்ணில் பட்டது. 'ஹிந்துக்கள் அல்லாதவர்கள் உள்ளே வரக் கூடாது' என்பதை ஆங்கிலத்தில் தெரிவித்துக் கொண்டிருந்த பலகை.

அதைப் பார்த்த நான், என் மகனின் கையைப் பற்றியிருந்த என் கையை 'வெடுக்' கென்று உதறினேன். அந்தப் பலகையையே சில நிமிஷம் வெறித்தேன். என் நெஞ்சுத் துடிப்பு அதிகப்பட்டது. நாசி சிவந்து உதடுகள் படபடத்தன. இந்தத் தேசத்தின் ஒற்றுமைக்குக் குந்தகம் விளைவிக்கும் இடமாய் அது எனக்குப் பட்டது.

என் செயலையும் நிலையையும் பார்த்த என் மகனும் மனைவியும் அதிர்ந்து போயினர். டிக்கெட் வாங்கிக் கொண்டு வந்த ப்ரிதிஹாரி என் படபடப்பு பார்த்து ஆச்சரியப்பட்டுப் போனார். காரணம் புரியாமல், என் மகனைப் பார்த்து நெற்றி சுருக்கினார்.

என் மனைவி என்னருகே வந்து என்னை உலுக்கி என் சிந்தனை கலைத்தாள். என் நிலையை ஊடுருவியவள் 'பொசுக்'கென்று உடைந்து அழ ஆரம்பித்தாள்.

நான் என் மனைவியின் தோள் பற்றி அணைத்து, "வா அருணா, நாம் ஊருக்குத் திரும்பலாம்" என்றேன்.

எனது இந்த வார்த்தை ப்ரிதிஹாரியைப் புரட்டிப் போட்டிருக்க வேண்டும். வெகு அவசரமாய் என்னருகே வந்தார். 'இவன் என்ன பைத்தியமா...!' என்கிற ரீதியில் என்னை ஏறிட்டார். நான் தீர்மானமாய் மீண்டும் சொன்னேன். "வா அருணா.... ஊருக்குத் திரும்பலாம்."

என் இத்தனை தூரப் பயணத்துக்கும், நெடுநாளைய நெக்குருகலுக்கும், க்ஷண நேர கேவலுக்கும், நிமிஷத்தில் நிகழ்ந்த மாறுதலுக்கும் என்ன அர்த்தம்.... என்பதாய் மூவரும் என்னைக் குறித்துக் கேட்பது எனக்குப் புரிந்தது.

"வா அருணா, ஊர் திரும்பலாம். என் இறைவன் இங்கே இல்லை என்பது எனக்கு சர்வ நிச்சயமாய்த் தெரியும்" என்றேன்.

தேர் வழுக்கிக் கொண்டு நகர ஆரம்பித்திருந்தது. ●

**''கருணாகரன்தான் உன் பெண்ணைக் கடத்தினான்னு எப்படிச் சொல்றே?''**

**''நானே பார்த்தேன் எட்டய்யா!''**

**''எப்போ பார்த்தே?''**

**''மதியம் மூணுமணி இருக்கும் சார்!''**

**''மூணுமணின்னு எப்படிச் சொல்றே?''**

**''மாநகராட்சி கடிகாரத்தை அந்த நேரம் பார்த்தேன் சார்!''**



**''நீ ஏன் மாநகராட்சிப் பக்கம் போனே?''**

**''மேயரைப் பார்த்து மனுக் கொடுக்க சார்!''**

**''மேயர்ட்டே மனுக் கொடுக்கிற அளவுக்கு அப்படி என்ன பிரச்னை உனக்கு?''**

**''தெருச் சாக்கடை அடைச்சிருக்கு சார்... அதுதான்!''**

**''சாக்கடை அடைச்சிருக்குன்னு உனக்கு எப்படித் தெரியும்?''**

**''தெருவிலே சொன்னாங்க சார்!''**

**''யாரு சொன்னாங்க?''**

**''எங்க தெரு ராமசாமி சார்!''**

**''ராமசாமிக்கும் உனக்கும் என்ன தொடர்பு?''**

**''நான் தெரியாத்தனமா ரிப்போர்ட் கொடுக்க வந்துட்டேன்; என்னை மன்னிச்சிடுங்க சார்!''**

**''அப்படின்னா ஒரு மன்னிப்புக் கடிதம் எழுதிக் கொடுத்துட்டு நடையைக்கட்டு...!''**

**— சீத்தாதம்பி**

# படகில் ஒரு பெண்

## 4

முத்துக்குமாருக்கும் சம்மதம். ஆயாவே செய்தி அறிந்து, வந்து தெரிவித்து விட்டாள்.

தனபாக்கியத்திற்குச் சொல்லவொணாத வெட்கமாக இருந்தது. கூடவே திகிலாகவும் இருந்தது. தான் செய்வது சரிதானா? இது துரோகம் இல்லையா? கல்யாணம் என ஒன்றைப் பண்ணிக் கொண்டால்தான் முத்துக்குமார் வீட்டோடு இருக்க முடியும் என்று சொல்லவில்லையே. பின் எதற்கு இந்தக் கல்யாணம்? பாண்டியன் போன்றவர்களிடம் இருந்து தப்பிக்கவா? அல்லது வேலுச்சாமியுடன் கூடி வாழ்ந்த வாழ்க்கையில் கிடைக்காத சந்தோஷம் முத்துக்குமாரோடு சேர்ந்து வாழும்போது கிடைத்து விடும் என்ற எதிர்பார்ப்பா?

மனம் படகுப் பயணி போல் இப்படியும், அப்படியுமாக அல்லாடியது. ம்ஹும். ரகசியமாய் ஒளித்து வைத்திருந்த கடல் குதிரையை எடுத்து உள்ளங்கையில் வைத்துப் பார்த்தாள். சிம்னி விளக்கின் ஒளியில் அந்தக் கடல் குதிரை தலையும், வாலும் சுருண்டு பாவமாகத் தெரிந்தது. அவளுக்கு அதிர்ஷ்டத்தைக் கொண்டு வருவதற்காக அது உயிரை விட்டதோ என்று தோன்றியது.

குடிசைக்கு வெளியே செந்திலின் சந்தோஷக் கூச்சல் கேட்டது. முத்துக்குமாரும் அவனும் திரும்பி விட்டார்கள். தனபாக்கியம் குடிசைக்கு வெளியே ரகசியமாக எட்டிப் பார்த்தாள்.

முத்துக்குமார் சுற்றி நின்ற சிறுவர்களிடம் ஏதோ கொடுத்துக் கொண்டிருந்தான். தின்பண்டமாய் இருக்கும். செந்திலைத் தோளிலிருந்து கீழே இறக்கி விட்டான். சிறுவர்கள் எல்லாம் சேர்ந்து மணலை நோக்கி ஓடினார்கள். முத்துக்குமார் குடிசையை நோக்கி நடந்து வந்தான்.

தனபாக்கியம் சட்டென்று குடிசைக்குள் வந்து விட்டாள். நெஞ்சம் படபடத்தது. கல்யாணப் பேச்சிற்குப் பிறகு இப்போதுதான் அவனைச் சந்திக்கப் போகிறாள். அவன் முகத்தைப் பார்க்கவே வெட்கமாக இருந்தது.

மீன் கடித்து அறுந்து போயிருந்த வலைக் குவியலை எடுத்து தலைகுனிந்து சீர் செய்யத் தொடங்கினாள். வலையில் இருந்து கவுச்சி மணம் அடித்தது.

''தனம்'' என்று முத்துக்குமாரின் அழைப்பு கேட்டது.

மெல்ல நிமிர்ந்தாள். முத்துக்குமாரின் முகத்துப் புன்முறுவல் அவளை வெட்கமுறச் செய்தது. முகத்திற்கு நேரே வலைத்துணியை உயர்த்திக் கொண்டாள் – தன் முகத்தை மறைத்துக் கொள்ள! இருந்தும் ஓட்டைகளின் ஊடே தனபாக்கியத்தின் முகம் மிக வசீகரமாகத் தெரிந்தது. விளக்கின் பொன்னொளி அவள் முகத்தின் ஒரு பக்கத்தை மட்டும் ஒளிரச் செய்தது.

"இஷ்டப்பட்டுத்தானே தனம் நீ ஆயா கிட்ட கேக்கச் சொன்னே?"

தனபாக்கியம் தலையை மேலும், கீழுமாய் அசைத்தாள்.

''அதுக்கில்ல... சுத்தி இருக்கறவங்க எதுனா சொல்லிக்கிட்டிருக்காங்களேன்னு இப்படி ஒரு முடிவை எடுத்தியோன்னு தோணிச்சி. அதான் கேட்டேன்."

"இல்ல. இஷ்டப்பட்டுத்தான் கேக்கச் சொன்னேன். ஒனக்கு?"

"செந்திலுக்கு எம்மேல உசுரு. எனக்கும் இப்ப அப்படித்தான். இந்த வூட்டை வுட்டு இனிமே எங்கயும் போகப் போறதில்ல. கூடவே இருந்து ஒன்னைப் பாத்துப் பாத்து ரொம்பப் புடிச்சிப் போச்சி. ஏன் கட்டிக்கக் கூடாதுன்னு எனக்கு ஒரு வாரத்துக்கு முன்னாடியே தோணிடிச்சி. நானா சொல்லிடலாமான்னு யோசிச்சேன். நீ என்னைப் பத்தி என்னன்னு நெனைச்சிப்பியோன்னு பயம். ஒரேயடியா தொரத்தி வுட்டா என்ன பண்றது? மறுபடியும் செந்திலு ரொம்ப வேதனைப் படுவானேன்னுதான் வாய் தொறக்காம இருந்தேன். எனக்கு இஷ்டந்தான் தனம். ரொம்ப இஷ்டந்தான்."

"கல்யாணத்தை எப்ப வெச்சிக்கலாம்?"



"நாளன்னைக்கு முகூர்த்த நாளுதான். நம்ப பெரியபாளையத்தா கோயில்லயே கல்யாணத்தை முடிச்சிக்கலாம். நல்ல காரியத்தை எல்லாம் தள்ளிப் போடக் கூடாது. அதுவும் கல்யாணம்னு முடிவானதுக்கப்புறம் ஏன் அதைத் தள்ளிப் போடறது? என்ன சொல்றே?"

**ம**றுநாள் விடியற்காலையில் செந்திலையும் அழைத்துக் கொண்டு சென்னைக்குப் புறப்பட்டான் முத்துக்குமார்.

செந்திலுக்கு ஒரு செட் நிஜாரும், சட்டையும் வாங்கினான். தனக்கென்று ஒரு ஜரிகை வேஷ்டியும், சட்டையும், தனபாக்கியத்திற்கு ஒரு புடவை. பெரிய நகைக் கடை ஒன்றில் சின்னதாக ஒரு தாலிப் பொட்டு வாங்கினான்.

**சுபா**

கடைசியாக ஹோட்டல். மசால் தோசை, பரோட்டா குருமா. சேமியாவும், சைனா க்ராஸும், ஐஸ்க்ரீமும் கலந்து வண்ண ரகளையாக ஃபலூடா சாப்பிட்டார்கள். ஊருக்கு பஸ் ஏறி வந்து சேர்ந்தார்கள்.

குடிசைக் கதவு திறந்து இருந்தது. லாந்தர் விளக்கின் வெளிச்சம் குடிசைக்கு வெளியே தங்கத் தகடாகத் தெரிந்தது. தனபாக்கியம் இன்னும் தூங்கவில்லை. அவன் வரவை எதிர்

பார்த்துக் காத்திருந்தாள்.

முத்துக்குமார் வீட்டிற்குள் நுழைந்தான்.

விளக்கிற்குப் பக்கத்தில் தனபாக்கியம் உட்கார்ந்திருந்தாள். அவள் உட்கார்ந்திருந்த விதமே முத்துக்குமாரின் இதயத்தில் சுருக்கென்று ஓர் ஊசியை ஏற்றியது.

ஒரு காலை மடித்து, ஒரு காலை உயர்த்தி நிமிர்ந்திருந்த முழங்காலின் மேல் மோவாயை வைத்துத் தாங்கி வெறித்துக் கொண்டிருந்தாள். அவள் கன்னங்களில் நீர் வடிந்து காய்ந்ததற்கான தடம்.

"தனம்" என்று மெல்லிய குரலில் அழைத்தான் முத்துக்குமார்.

நிமிர்ந்து பார்த்தாள். அவனைப் பார்த்த பின்னும் முகத்தில் மலர்ச்சி இல்லை. ஒரு வெறுமைதான் தெரிந்தது.

செந்திலைக் கீழே இறக்கிப் படுக்க வைத்தான்.

"என்ன தனம்? ஏன் ஒரு மாதிரி இருக்கே? ஒடம்பு சரியில்லையா? இல்ல, ஒன்னை யாராவது ஏதாவது சொல்லிட்டாங்களா?"

"நான் சொல்றேன் மாப்பிள்ளே" என்று குடிசை மூலையிலிருந்து ஒரு குரல் கேட்டது.

முத்துக்குமார் திரும்பிப் பார்த்தான்.

இதுவரை அவன் பார்த்திராத ஒரு ஆள். குறை வெளிச்சத்தில் அவன் முகம் சரியாகத் தெரியவில்லை. தாடியும், மீசையும் வைத்திருந்தான் என்பது புரிந்தது.

"நீ யாரு?" என்று கேட்டான் முத்துக்குமார். அவன் குரலில் கோபம் இருந்தது.

அந்த ஆள் கடகடவென்று சிரித்தான். சிரிப்பு அடங்கியதும் அவன் சொன்னான் :

"நல்ல கேள்விப்பா முத்துக்குமார். நான் யாருன்னா கேட்டே? நான்தான் வேலுச்சாமி. தனபாக்கியத்தோட புருஷன். நீ தூக்கினு வந்து நோவாம படுக்க வெச்சியே, செந்திலு அவனோட அப்பன்."

முத்துக்குமார் கையில் வைத்திருந்த துணிமணிகள் நிரம்பிய பை அவனையறியாமல் நழுவிக் கீழே விழுந்தது.

**"சா**ப்புடு முத்துக்குமாரு. தனபாக்கியம் ஒனக்கு'ப் புடிக்குமேன்னு வவ்வா மீனு கொழம்பு வச்சி, சொறாபுட்டு பண்ணியிருக்குது. நீ என்னன்னா சோத்துல வெரலை வச்சி அளைஞ்சினு இருக்கியே" என்றான் வேலுச்சாமி.

தனபாக்கியம் வேலுச்சாமிக்கும், முத்துக்குமாருக்கும் மவுனமாகப் பரிமாறிக் கொண்டிருந்தாள்.

"என்னால சாப்பிட முடியல..." என்றான் முத்துக்குமார். "சினிமாலதான் இந்த மாதிரி கதை கட்டிப் பாத்திருக்கேன். இப்ப என் வாழ்க்கைலயே நடக்கறதப் பாக்கறச்சே என்னால நம்பவே முடியல. சாப்பாடு எப்படி போவும்?"

"இப்ப என்ன ஆய்டிச்சின்னு நீ இப்ப பொட்டச்சி போல மூக்கைச் சிந்தினு இருக்கே?" என்று கேட்டான் வேலுச்சாமி. "செத்துப் போனவன் எப்படித் திரும்பி வந்தான்னு பாக்கறியா? அதான் விதிங்கறது. அன்னைக்கு கட்டு மரத்துல ஏறச் சொல்லவே ஃபுல்லா தண்ணி அடிச்சிருந்தேன். கடலுக்குள்ள தனியா ரொம்பத் தொலைவு போய்ட்டேன். வலையை எடுத்து வீசிட்டு, பிடி ஒண்ணை வலிச்சினு இருந்தேன். என் பக்கத்துல ஒரு ட்ராலரு இன்ஜின் சத்தம் கேட்டது. 'இது இன்னாடாது, புதுசா இருக்குதே'ன்னு நிமுந்து பாத்தா சிலோன் மிலிட்டரிக்காரங்க... பட்டா நம்பளைத் தீவிரவாதின்னு மடக்கிட்டாங்கப்பான்னா..."

வேலுச்சாமி தன் அனுபவங்களையெல்லாம் விரிவாக கையை ஆட்டி, ஆட்டி சொன்னதெல்லாம் முத்துக்குமார் காதில் ஏறவேயில்லை. உறைந்து போய் உட்கார்ந்திருந்தான்.

"...கடைசில முந்தா நாளுதான் என்னை வெளியே உட்டானுங்கோ. தனபாக்கியம் எனக்கு மந்திரிச்ச தாயத்து கட்டியிருந்தா. சாமி... நான் உசிரோட இருக்கறதே எம் பொண்டாட்டி கட்டிவுட்ட தாயத்தோட மகிமையாலதான். அதான் வூட்டைப் பாத்து ஓடியாந்தேன். இங்க வந்து பாத்தா என் பையன் இன்னொரு அப்பனைத் தேடிக்கிட்டான்னு தெரிஞ்சது" என்று சிரிப்பு மாறாமல் சொல்லிவிட்டு நிறுத்தினான் வேலுச்சாமி.

---



**"இன்னிக்கு என் பெண்டாட்டி மேல எனக்கு படு கோபம் வந்துருச்சுங்க..!"**

**"கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி நீங்க உங்க பையனைப் போட்டு அடி அடின்னு அடிக்கும்போதே அப்படின்னுதான் நெனச்சேங்க...!"**

**– ஸ்ரீதர்**




''கமலா... ஒரு பட்டுப் புடைவை எடுத்தா ரெண்டு பனியன் இலவசம்'னு சொன்னாங்கன்னு ஒரு புடைவை எடுத்துட்டு வந்திருக்கேன்... வந்து பாரேன்!''

''அப்போ.. உங்களுக்கு மட்டும் ரெண்டு. எனக்கு ஒண்ணுதானா?''

– ஸ்ரீதர்

முத்துக்குமார் இமைக்கக் கூட மறந்து போய் வேலுச்சாமியையே பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு மாபெரும் விடுதலை உணர்வு அவனைச் சூழ்ந்த மாதிரி இருந்தது.

அவனைப் பொறுத்த வரை 'வெள்ளை' சொக்கலிங்கத்தின் சிற்பக்கூடம் இருக்கவே இருக்கிறது. வசந்தகாலம் என்பது ஒரு பருவ காலம். சில நாட்களுக்கு இருக்கும். மகிழ்ச்சி தரும். கூத்தாட வைக்கும். அப்புறம் இயற்கை விதிப்படி கோடையும், குளிரும் ஆட்சி ஏற்கத்தான் செய்யும். எந்நாளும் வசந்தகாலம் என்ற கனவுடன் இருப்பது அறியாமை.

முத்துக்குமார் எழுந்து கை கழுவிக் கொண்டான். குடிசையின் மூங்கில் கம்பமொன்றில் அவனது சட்டை ஒன்று தொங்கியது. அதன் பையில் கைவிட்டு ஒரு அயல் நாட்டு சிகரெட் பெட்டியை எடுத்து வேலுச்சாமியிடம் நீட்டினான்.

"என்னது இது?" என்று வேலுச்சாமி புரியாமல் கேட்டான்.

"நீ பீடி புடிப்பியாமே. தனம் சொல்லிட்டிருக்கும். என்கிட்ட நேத்து ஒரு ஃபாரின் கஸ்டமரு 'வேணாம், வேணாம்'னு சொல்லச் சொல்லக் குடுத்துட்டுப் போனாரு."

"தூக்கி கடல்ல போடுப்பா அதை" என்றான் வேலுச்சாமி. "நான் ஆட்டம போட்டவன்தான். இல்லேன்னு சொல்லலை. பசங்க எனக்கு என்னா பேரு வச்சிருந்தாங்க தெரியுமா? குடி-பீடி-லேடி, கேடி. தனபாக்கியத்துக்குக் கூடத் தெரியும். கியாபகம் இருக்குதா தனபாக்கியம்?"

தனபாக்கியம் மெல்லப் புன்முறுவல் செய்தாள்.

"யப்பா. சிரிச்சிடிச்சிப்பா" என்று அந்தச் சிரிப்பை ரசித்து அவனும் சிரித்தான். "இப்ப எல்லாத்தையும் சப்ஜாடா ஏறக்கட்டிட்டேன். பீடி கெடையாது. குடி கெடையாது. அந்தக் குடியினாலதான எம்பொண்டாட்டி, புள்ளை எல்லாரையும் வுட்டுட்டு எங்கயோ ஒரு டொக்கு ரூம்ல அடைஞ்சி கெடந்தேன்."

முத்துக்குமார் எழுந்தான். "ரொம்ப நாள் கழிச்சி வந்திருக்கே. நீயும், ஒன் சம்சாரமும் பேச வேண்டியது நெறைய இருக்கும். நான் என்னத்துக்கு நடுவுல! கௌம்பறேன்."

"எங்க?" என்று திகைத்த குரலில் கேட்டான் வேலுச்சாமி.

"வெள்ளைச் சொக்கலிங்கம் வூட்டுக்குத் தான்" என்றான் முத்துக்குமார்.

"இதப் பார்றா..." என்றான் வேலுச்சாமி எகத்தாளமாக. "ஏம்பா. நாளைக்கு நீதானப்பா மணைல உக்காந்து தனபாக்கியம் கழுத்துல தாலியைக் கட்டப்போறே?"

தனபாக்கியம் குமுறிக் குமுறி அழத் தொடங்கினாள்.

"அழாத தனபாக்கியம். நான் இருந்தாலே ஒனக்கு அழறதுதான் மிச்சமாவுது பாத்தியா? கேளு முத்துக்குமார். எந்நேரமும் அடி, ஒதைதான். இந்த நெஞ்சுல எவ்வளவு ஒதை ஒதைச்சிருக்கேன். நான் ஒண்ணும் நல்ல புருஷனா வாழவேயில்லப்பா. என்னவோ புருஷன், பொண்டாட்டின்னு சொல்லிக்கறதுக்கு ஒரு பையனைப் பெத்துட்டோம். அதெல்லாம் ஒரு வாழ்வா? தனபாக்கியத்துக்கு எங்கூட வாழற கஷ்டம் இருக்கக் கூடாதுன்னுதானே கடலு என்னை உள்ள இட்டுனு போயிடிச்சி? செந்திலு ஒங்கூட சந்தோஷமா இருக்கறதைக் கேள்விப் பட்டேன். எம் பையன் எங்கூட இருக்கறதை வுட ஒங்கூட இருக்கசொல்லோ சந்தோஷமா இருக்கான்னா, என்ன அர்த்தம்? நான் அவனுக்கு அப்பனா இருக்க லாயக்கில்லாதவன்னுதானே அர்த்தம்? தனபாக்கியங்கூட ஒன்னை இஷ்டப்படுதுன்னு ஆயா சொல்லிச்சி. ஒடம்பு சேந்ததால புருஷன் பொண்டாட்டின்னு சொல்லிக்கறது அசிங்கம். மனசு ஒத்துப் போனவங்க புருசன் - பொண்டாட்டியா இருக்கறதுதான் கரீட்டு. என்னை உடுங்க. ராவோட வந்தவன். ராவோடவே போயிடறேன். செந்திலைப் பாத்துட்டேன். தனபாக்கியத்தைப் பாத்துட்டேன். அலங்க சந்தோஷமா இருக்காங்க. அப்படியே இருக்கட்டும். நான் வந்தேன், போனேன்றது கூட செந்திலுக்குத் தெரிய வேணாம். அவனைப் பொறுத்தவரைக்கும் நீதான் அப்பன். நீயே

அப்பனா இரு. வரட்டுமா?" வேலுச்சாமி எழுந்து கொண்டான்.

எங்கிருந்துதான் அவ்வளவு ஆவேசம் வந்ததோ தெரியவில்லை. தனபாக்கியம் அப்படியே பெண் சிறுத்தை போல் வேலுச்சாமி மேல் பாய்ந்தாள்.

"போவாதய்யா. மறுபடி என்னை வுட்டுப் போய்டாதே. நான் பாவி. நீ போய்ட்டேன்னு நெனைச்சி மனசை அலைய வுட்டுட்டேன். என்னை இழுத்துப் போட்டு நாலு மிதி மிதிச்சி, "இன்னாடி. இப்டி ஒரு அக்குரும்பு பண்றதுக்கு இருந்தியேடி'ன்னு கேட்டுருந்தாக் கூட சந்தோஷப்பட்டிருப்பேன்யா. அதை வுட்டுட்டு என்னை அதுங்கூட சேந்து இருக்கச் சொல்றியே. ஒனக்கு எப்படிய்யா மனசு வந்தது? நீ பெரீ மன்ஷனாயிட்டேய்யா. இப்படியாப்பட்டவரை உட்டுட்டு நான் அதுங்கையால தாலியைக் கட்டிக்கு வேன்னு நெனைக்கிறியா? செத்துப் போயிடு வேன்யா." தனபாக்கியம் கதறிக் கொண்டே வேலுச்சாமியின் தாடி அடர்ந்த முகத்தைப் பிடித்து உலுக்கினாள்.

அவள் கண்களில் இருந்து கடல் நிற்காமல் பெருகிக் கொண்டே இருந்தது.

"ஐய தனபாக்கியம். அழாதம்மே. நீ சந்தோஷமா இருக்கணும்னுதான் அப்படிச் சொன்னேன் கண்ணு. செந்திலு, முத்துக்குமாரையே அப்பன், அப்பன்னு சுத்தி வரான்னு ஆயா சொல்லிச்சே."

"அவன் அறியாப்பையன்யா. கொழந்தை. நாளைக்கு இந்த முத்துக்குமாரை வுட்டுட்டு இன்னொருத்தனை அப்பன்னு சொல்றான். அப்ப இன்னா சொல்வே. அவனையும் கட்டிக்கச் சொல்லுவியா? போய்யா கம்முனு. வாயில வண்டை, வண்டையா வருது..." என்று தனபாக்கியம் வேலுச்சாமியின் மார்பில் தடதடவென்று குத்தினாள். அவன் தலைமுடியைப் பற்றி உலுக்கினாள்.

"வுடும்மே. தெரியாம சொல்லிட்டேன்" என்று வேலுச்சாமி அவளை அணைத்துக் கொண்டான். அவள் முதுகில் வருடிக் கொடுத்தான்.

முத்துக்குமார் கண்களில் துளிர்த்த நீரை ரகசியமாகத் துடைத்துக் கொண்டான். மூலையில் இருந்த அவனது பெட்டியை நோக்கிப் போனான்.

"யேய் கழுதை. சீ! இர்ரா. ஆன்னா, ஊன்னா பொட்டியைத் தூக்கிக்கறான். இனியும் எங்கடா ஓடப்பாக்கறே? ஒம்மனசு என்னா வேதனைப்படும்னு எனக்குத் தெரியாதா? தனபாக்கியம் மாதிரியே ஒரு பொண்ணைத் தேடிக் கட்டி வக்கறேன். அதுக்கப் பாலதான் எனக்கு வேற வேலையே. என்ன சொல்றே தனபாக்கியம்."

"ஆமாய்யா. அதுக்கு ஒரு பொண்ணைப் பாக்கணுய்யா. அப்பத்தான் நான் நிம்மதியா ஒங்கூட இருக்க முடியும். அதும் மனசை நான் பாடாப்படுத்திட்டேன்."

"கேட்டுக்கினியோ? நீ எனக்கு இனிமே தம்பிடா. செந்திலுக்கு சித்தப்பன். ஒனக்கு நான் செய்யாம வேற யார்ரா செய்வாங்க? அப்படி என் சொல்லை மீறி எங்கயாவது போனே நடக்கறதே வேற..."

முத்துக்குமார் அந்த முரட்டு அன்பில் மூழ்கிப் போய் கையில் எடுத்த பெட்டியை நழுவ விட்டான். கண்களில் துளிர்த்திருந்த நீர் இப்போது கன்னங்களில் இறங்கியது.

தனபாக்கியம் அவனை நெருங்கி, தன் முந்தானையால் அவன் கன்னத்தைத் துடைத்து அவன் தலைமுடியை ஆதுரத்துடன் கோதி விட்டாள்.

ஒரு தாயின் பரிவு அதில் கலந்திருந்தது.

– முற்றும் –

## நூறாண்டுகளாக ஒரே சுவை!

**டைஜஸ்டிவ் – இது பிரிட்டனில் அதிகமாக விற்பனையாகும் பிஸ்கட். "நூற்றாண்டு விழா கொண்டாடிவிட்ட இதன் சிறப்பு அம்சம் என்னவென்றால், நூறாண்டுகளாக பிஸ்கட்டின் ருசி ஒரே மாதிரியாக மெயின்டெயின் பண்ணப்படுவதுதான். "ஆரம்பத்தில் பிராணிக் கொழுப்பு பயன்படுத்தினோம். பிறகு ஆராய்ச்சியின் பலனாக, வெஜிடபிள் கொழுப்பு பயன்படுத்தி வருகிறோம். ஆனாலும் ருசியில் மாற்றமில்லை" என்கிறார் அந்தக் கம்பெனியின் பிரதிநிதி. விரைவில் இந்தியாவிலும் விற்பனைக்கு வரப்போகிறது இது.**

**– சி.எம்.**

# 2000-ம் ஆண்டின் புத்தாண்டுப் பரபரப்பு!

அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்தை மிக பிரும்மாண்டமான விதத்தில் வரவேற்கப் பல நாடுகள் தயார் செய்து கொண்டிருக்கின்றன.

லண்டனில் பாராளுமன்றத்தினருகில், தேம்ஸ் நதிக்கரையில் ஐநூறு அடி உயரமுள்ள ராட்சதச் சக்கரம் ஒன்றை உருவாக்கி வருகிறார்கள். இது வரும் ஆண்டின் துவக்கத்திலிருந்து இயங்கும். ரங்கராட்டினம் போன்ற தோற்றம் கொண்ட இதில் ஒரே சமயத்தில 960 பேர் உட்கார்ந்து கொண்டு, சுமார் முப்பது மைல் தொலைவிலுள்ள சுற்றுப்புறப் பகுதிகளைக் கண்டுகளிக்கலாம்.

அன்று ஒரு புனித நாளும் கூட! சுமார் மூன்று கோடிப் பேராவது ஜெருசலம் மற்றும் பெத்லகேமுக்கு வருவார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டு, அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. வாடிகனும் அப்படியே.

அடுத்த ஆண்டு பிறக்கும்போது பாரிஸிலுள்ள ஈஃபெல் டவரிலிருந்து ஒரு ராட்சத 'முட்டை' இறங்குமாம். அது வெடிக்க, அதற்குள் நூற்றுக் கணக்கான தொலைக்காட்சித் திரைகள்! உலகின் பல்வேறு சானல்கள் வழங்கும் நிகழ்ச்சிகளை ஒரே சமயத்தில் கண்டுகளிக்கலாம்!

தவிர பிரான்சில் 660 அடி உயரமுள்ள 'உலக கோபுரம்' ஒன்று உருவாகிறது. இது சுற்றுப்புறச் சூழல் உணர்வை மக்கள் மனத்தில் பதியவைக்குமாம்.

பிரான்ஸின் பங்கு இதோடு முடிந்து விடவில்லை. நான்கு ராட்சதக் கடிகாரங்களை அது நிறுவப் போகிறது. அவற்றில் மையமாக உள்ளதின் ஒலி இருபது மைல் தொலைவுக்குக் கேட்குமாம்.

அமெரிக்கா சும்மா இருந்து விடுமா? 'மில்லனியம் (ஆயிரமாண்டு) சொஸைடி, மில்லனியம் இன்ஸ்டிடியூட், மில்லனியம் சிம்போசியம்' என்று ஏகப்பட்ட அமைப்புகள் உருவாகி விட்டன. நியூயார்க்கின் 'டைம் ஸ்கொயர்' பகுதியில் விடிய விடியப் புத்தாண்டு தின பார்ட்டிகள் தொடர்ந்து ஒரு வாரத்துக்கு நடக்கப் போகிறது. கலிபோர்னியாவில் நூறு இசைக் குழுக்கள் ஒரே இடத்தில் இசைக்கப் போகின்றன. நிகழ்ச்சியின் முடிவில் (வருட எண்ணிக்கையைக் குறிக்கும் விதத்தில்) இரண்டாயிரம் முறை குண்டுகள் வெடிக்கப்படும்!

வர்ஜினியாவிலுள்ள மில்லனியம் அமைப்பு எகிப்தின் பிரபல பிரமிடின் அருகே புத்தாண்டுக் கொண்டாட்டங்களை வைத்துக் கொள்ளப் போகிறது. எலிசபெத் ராணி கூட இதில் கலந்து கொள்ளப் போகிறாராம். 1800 பேர் அடங்கிய கோஷ்டி சீனப் பெருஞ்சுவர் அருகே புத்தாண்டை வரவேற்று மகிழ இருக்கிறது.

பல்வேறு பிரபல ஹோட்டல்களில் 31.12.99க்கான அறை ஒதுக்கீடுகள் இப்போதே தொடங்கி விட்டன. லண்டனிலுள்ள சவாய் க்ரில் என்ற பிரபல ஹோட்டலில் அன்றைய தேதிக்கு இன்றே ஹவுஸ் புல்! அன்று விடுமுறை வேண்டும் என்று கேட்ட ஹோட்டல் சிப்பந்திகளுக்கு, ஐந்தாறு மடங்கு அதிக சம்பளம் கொடுத்து வேலை செய்யச் சொல்லிருக்கின்றன பல ஹோட்டல் நிர்வாகங்கள்!

வேறு சில கூத்துகளும் நடைபெறுகின்றன. '17.3.1999 அன்று வெற்றிகரமாக இல்லற உறவு கொள்வது எப்படி?' என்பது பற்றி சில மருத்துவர்கள் பல முக்கிய நகரங்களில் தம்பதிகளுக்கு வகுப்பு எடுக்கத் தொடங்கி இருக்கிறார்கள். அன்று என்ன சிறப்பு என்கிறீர்களா? அன்று கருத்தரித்தால் 1.1.2000 அன்று குழந்தை பிறக்கும் வாய்ப்பு அதிகமாம்! புதிய நூற்றாண்டின் முதல் குழந்தையாக அது அமைந்து விட்டால் எவ்வளவு பெருமை!

— ஜி.எஸ்.எஸ்.





✉ காஷ்மீர் பிரச்னையில் தீர்வு ஏற்படாத வரையில், இந்திய-பாக் நல்லுறவு என்பது கானல் நீர் தான். தலையங்கத்தில் குறிப்பிட்டுள்ளது போல, காஷ்மீர் மக்களின் ஒப்புதலோடு இப்பிரச்னைக்குத் தீர்வு காண்பது, இரு நாட்டுக்கு மட்டுமல்ல; சர்வதேச அளவில் தெற்காசியாவின் மீதான பதற்றத்தையும் தணிக்க உதவும்.

தூத்துக்குடி-1, ப. சுகுமார்.

✉ "உடன்பிறவா சகோதரிகளில் ஒருவருக்கு கண்கோளாறு, மற்றவருக்கு சிரித்துச் சிரித்து பல்களுக்கு." இந்தக் கார்டூனைப் பார்த்துச் சிரித்ததில் எனக்கு வயிற்றுவலியே வந்து விட்டது! சிரிக்கவும், சிந்திக்கவும் வைத்த கார்ட்டூன்.

சென்னை – 91, என். கார்த்திகேயன்.

✉ 'மம்தா பானர்ஜியுடன் ஒரு மாறுபட்ட சந்திப்பு' ஒரு வித்தியாசமான அனுபவமாக இருந்தது. இதுபோன்ற சந்திப்புக்களை கல்கி 'அடிக்கடி நிகழ்த்தலாம்.

பூனாம் பாளையம்,

ஆர்.பி. ஜெயச்சந்திரன்

✉ ஜெயித்த கதையில் 'உயிரோடிருப்பது பெரிய விஷயமல்ல; உயிர்ப்போடிருக்க வேண்டும்' என்னும் உயிரோட்டமான பார்த்திப வரிகள் டச்சிங்.

தூத்துக்கடி –2,

சிவராமசுப்பிரமணியன்

✉ பார்த்திபனை அதிகம் தெரியாத காலத்திலேயே தாவணிக் கனவுகளில் நடித்த சிறு வேடத்தைப் பாராட்டி கல்கி எழுதிய விமர்சனமும் பார்த்திபன் ஜெயித்த கதைக்கு ஒரு காரணம் என்பது முற்றிலும் புதிய சேதி.

நெய்வேலி – 7, எஸ். கண்ணன்.

✉ 'அமரர் கல்கிக்கு அஞ்சல் துறையினரின் அஞ்சலி' கல்கி வாசகர்களின் நெஞ்சில் தேனாகப் பாய்ந்தது! 'கல்கி'யின் புகழ் உலகெங்கும் பரவுவதில் கல்கி வாசகர்கள் பெருமிதம் கொள்கிறார்கள்.

மதுரை-16, ஆர். லட்சுமி.

✉ உணர்ச்சி பூர்வமான சுவையான கதையைப் பன்னிரெண்டே வாரத்தில் இப்படி படக்கென்று ரிஷபன் முடித்து விட்டாரே என்ற கோபம் ஒருபுறம் இருந்தாலும், கச்சிதமான கதையின் முடிவு அக்கோபத்தை விரட்டியடித்து விட்டது.

தோட்டக்குறிச்சி, இரா. வளையாபதி.

✉ வலுவான கதை; வளமான நடை; பாந்தமான பாத்திரப்படைப்பு! நிலா வட்டத்தின் மூலம் தாம் ஒரு முதிர்ச்சியான எழுத்தாளர் என முத்திரை பதித்துவிட்டார் ரிஷபன். வாழ்த்துக்கள்.

பெட்டவாய்த்தலை, சே. முருகன்.

✉ பல பள்ளிகளில் மாணவர்கள் ஏசி அறையில் கம்ப்யூட்டருடன் கல்வி கற்க, ஜமீன் எண்டத்தூரில் ஒழுங்கான வகுப்பறை, டாய்லெட் போன்ற அடிப்படை வசதிகள் கூட இல்லாத நிலையில் படிக்கும் மாணவர்களை நினைத்தால் மனம் கனக்கிறது. இதற்கெல்லாம் யாரை நொந்து கொள்வது என்று தெரியவில்லை. இனியாவது அவர்களது குறைகள் நிவர்த்தி செய்யப்படுமா?

மங்கநல்லூர்,

எல். துர்காதேவி

## வட்டமேஜை

✉ சமையல் நிகழ்ச்சி மூலம் பிரபலமான சஞ்சீவ் கபூரின் அனுபவங்களை ரசித்தேன்.

சேலையூர், கே. வி. ராமன்

✉ மாதுரியின் 'வீக்கம் Vs கொதிப்பு' சிறுகதை வித்தியாசமான ஒரு நகைச்சுவைப் படைப்பு. யதார்த்தத்தை வெகு நாசூக்காகச் சித்திரித்திருக்கிறார். பாராட்டுக்குரியது. லாவண்யாவின் மலர், மனம், மனிதர்கள் சிறுகதை மனதைத் தொட்டுவிட்டதுடன், இதயத்தில் நாற்காலி போட்டு உட்கார்ந்து விட்டது. நல்ல கரு-சிறந்த கதை-தேர்வு செய்த கல்கிக்கு நன்றி.

விழுப்புரம்-2, வை. வெங்கடேசன்

✉ கடைகளில் 'கல்கி' கொடுங்க என்று கேட்பதைப் போல போஸ்ட் ஆபீஸில் போய் " 'கல்கி' ஸ்டாம்ப் கொடுங்க" என்று கேட்கப் போகும் நாளுக்காகக் காத்திருக்கிறேன்.

திருச்சி-12, ச. நாகராஜன்

✉ வைக்கம் முகம்மது பஷீரின் "ஒரு காதல் டைரி" தமிழில் 'கல்கி' மூலம் வருவது மிகச் சிறந்த ரசனைத் துவக்கம்.

நெய்வேலி – 1, பா. சத்தியமோகன்

# அப்பா

வெற்றிலை
போடுவதற்கென்றே
விசேஷப் பயிற்சி
மேற்கொண்டதைப்
போல

பொட்டலத்து சீவலை
விரலின்
இடுக்கிலிருந்து
அதக்கிக்கொள்வார்
சிதறி விடாமல்.

எனக்குக் கவிதை
அப்பாவுக்கு
வெற்றிலை.

ஒற்றுப் பிழைகளை
நானும்
காம்பை அவருமாய்
கிள்ளிக் கொண்டே
இருக்கிறோம்.

நானும்
போடுகிறேனென
சுண்ணாம்பு
அதிகம் தடவி
அவதிப்பட்டிருக்கிறேன்

ஒருமுறை கூட
கவிதையெழுத
முயன்றதில்லை
அவர்.

எப்போதும்
ஒரே பக்குவத்தில்
இரத்தச் சிவப்பைக்
கண்டு விடுகிறது
அவர் நாக்கு

எல்லா
கவிதையிலும்
இறுதி வரிகளுக்கான
வார்த்தையை
தேடிக் கொண்டிருக்கிறேன்
நான்.

— யுகபாரதி





# 'டிரிம்' ஆகிறார் படையப்பா

படையப்பா படம் ரெடியாகி விட்டது. எடிடிங் பண்ணின பிறகு பதினேழாயிரத்துச் சொச்சம் அடி. படம் முடிய சுமார் மூணு மணி நேரமாகும் என்பதால், இரண்டு இடைவேளை விடலாமா? என்று யோசித்திருக்கிறார்கள். ஆனால், சாதாரணமாக பாடல் காட்சி வந்தாலே, சிகரெட் பிடிக்க வெளியில் போய் விடுகிற தமிழ் ரசிகளை, தொடர்ந்து மூணு மணி நேரம் தியேட்டர் இருக்கையிலேயே கட்டிப் போடுவது இந்தப் படத்தின் மூலம் சாத்தியமாகுமா? என்று சந்தேகம் வந்து விட்டது.

ரஜினியே தமக்கு நெருக்கமான தமிழ்ப் பட உலகின் பல சீனியர் புள்ளிகளை போனில் தொடர்பு கொண்டு, படத்தின் நீளம், இரண்டு இடைவேளை ஐடியா பற்றியெல்லாம் ஆலோசனை கேட்டிருக்கிறார்.

அவர்களில் சிலர், நீங்க என்ன பண்ணினாலும், ஓ.கே.தான் என்கிற ரீதியில் கழன்று கொண்டு விட்டார்கள்.

மக்களின் ரசனையைப் புரிந்து கொண்ட, ரஜினி மீது அக்கறை கொண்ட சிலர், "இரண்டு இடைவேளையை முடிந்தால் தவிர்க்கப் பாருங்கள். இரண்டு வருட இடைவெளியில் இந்தப் படம் வருவதாலும், பத்திரிகைகளின் பரபரப்பான பப்ளிசிடியாலும் ரசிகர்களிடம் எதிர்பார்ப்பு மிக அதிகமாக இருக்கிறது. எனவே, மூணு மணி நேரப் படத்தில், சில நிமிடங்கள் தொய்வு என்றாலும், அது நெகடிவ் ஆகப் போய்விட வாய்ப்பு உண்டு. எனவே, முழுப் படத்தையும் ஒரு தடவைக்கு இரண்டு தடவை மறுபடி பார்த்து, எங்கெங்கெல்லாம் குறைக்க முடியும் என்று பார்த்து, அதிகபட்சம் பதினாறாயிரம் அடி இருக்கும்படி பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று ஆலோசனை சொல்லி இருக்கிறார்கள்.

ரஜினியும் அவர்களது அக்கறையான அட்வைஸ்படி படத்தின் நீளக் குறைப்பு முயற்சியில் இறங்கினார். பதினாறாயிரம் அடிக்குள் முடிக்க முடியாமல், நானூறு அடி கூடுதலாகி விட்டது. மறுபடி படத்தின் நீளத்தைக் குறைக்கும்படி ஆலோசனை சொன்னவர்களிடம் விஷயத்தைச் சொல்லிக் கருத்துக் கேட்டிருக்கிறார். அவர்கள் நானூறு அடி அதிகமானால் பரவாயில்லை என்று சொல்லி விட்டார்கள். இது ரஜினியை நிம்மதிப் பெருமூச்சு விட வைத்தது.

உபரியாய் இன்னொரு தகவல். திருட்டு வீடியோவால் தமது படம் பாதிக்கப்பட்டு விடக்கூடாது என்பதில் ரஜினி குறியாக இருக்கிறார். எனவே இதுபற்றி கலைஞர் காதிலும் போட்டிருப்பதாகவும், கலைஞர் சென்னை மாநகரப் போலீஸ் கமிஷனரிடம் எச்சரிக்கையாக இருந்து, திருட்டு வீடியோக்காரர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்கத் தயாராக இருக்கும்படி கூறியுள்ளதாகவும் கமிஷனர் அலுவலகத்து பட்சி ஒன்று சொல்லுகிறது.

— சி. எம்.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 /99* Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka